மலர் - 3 இதழ் - 09



# தமிழணங்கு

(தமிழால் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு பன்மொழி ஆய்விதழ்

மார்ச் 2025

தனிச்சுற்றுக்கு மட்டும்

ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி

## ஆன்மநேய ஒருமைப்பாட்டை முன்னிறுத்தி
மு. பழநிச்சாமி

## The Ramayana in Indonesia: Tradition, Adaptation, and Performance
முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன்

## காமன் பண்டிகை எனும் காமுட்டி விழா
அண்ணாமலை சுகுமாரன்

## தமிழும் நானும் (நேர்காணல்)
முனைவர் சிவ. இளங்கோ

## ரிக் வேதம் கூறும் அகத்தியர்
தேமொழி

## தொல்தமிழர் கண்ட அறுவை மருத்துவம்
அண்ணாமலை சுகுமாரன்

## Gene Notes in Vengai Anchor – II
முனைவர் செ. இராஜேஸ்வரி (மொ.பெ)
தமிழ் மூலம்- தமிழ்மகன்

இன்னும் பல...

அகத்தியர்

அன்பளிப்பு ரூபாய்: 120/-



தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்

# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-3*　　*மார்ச் – 2025*　　*இதழ்-9*



**சிறப்பாசிரியர்**
பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி

**நிறுவனர் & தலைமைப் பதிப்பாசிரியர்**
முனைவர். திருமதி செ. இராஜேஸ்வரி

**பொறுப்பாசிரியர்**
முனைவர். சந்திரிகா சுப்பிரமணியன்

**ஆசிரியர் குழு**
கிங்ஸ்டன் ஜெகநாதன் (இந்தியா)
தேமொழி (அமெரிக்கா)
அன்பு ஜெயா (ஆஸ்திரேலியா)
மின்னச்சன் இங்கர்சால் (நோர்வே)
Dr. புதேரி தானப்பன் (டில்லி)

**வடிவமைப்பு**
*C. சந்திர விமல் M.A., B.Ed*



தனி இதழ் .............................................. ரூ 120
அரையாண்டு சந்தா ............................. ரூ 600
ஆண்டு சந்தா......................................... ரூ 1200

Google Pay / Phone Pay மூலம் செலுத்த
+91 7010997639

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

கட்டுரைகள் அனுப்புவோர்

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com க்கு அனுப்பவும்



இவ்விதழில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் அனைத்தும் கட்டுரையாளர்களின் கருத்துகளே ஆகும். அந்த கருத்துக்களுக்கும் இதழாசிரியருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

\- இதழ் ஆசிரியர்


## உள்ளடக்கம்

**வள்ளலாரின் வாக்கும் வாழ்வும்**

# ஆன்மநேய ஒருமைப்பாட்டை முன்னிறுத்தி ...

**மு. பழநிச்சாமி,** *நாகமலை, மதுரை – 19*
*மின்னஞ்சல் : vmps834@gmail.com*



பத்தொன்பதாம் நூற்றாண்டு, இந்தியத் துணைக்கண்டம் பல்வேறு புரட்சிகளைச் சந்தித்தது. அரசியல் புரட்சியாக சிப்பாய்க் கலகம் தோன்றியது. இந்த அரசியல் புரட்சிக்கு முன்பே சமயப் புரட்சி, மதத்தில் மறுமலர்ச்சி காணும் புரட்சி தோன்றியது. வங்கத்தில் இராஜாராம் மோகன்ராய் அப்புரட்சியைத் தொடங்கி வைத்தார். குஜராத்தில் தயானந்த சரஸ்வதி சமயப் புரட்சியைத் தோற்றுவித்தார். தென்புலத் தமிழகமும் தன் பங்கிற்கு வள்ளற் பெருமானைத் தோற்றுவித்தது.

இராமலிங்க அடிகள், கடலூர் மாவட்டத்தில் உள்ள மருதூர் என்னும் சிற்றூரில், இராமையா பிள்ளை சின்னம்மை ஆகியோருக்கு மகவாக 5.10.1823-இல் திருவவதாரம் செய்தார். அவர் மிகச் சாதாரணமான எளிய குடும்பத்தில், நம் எல்லோரையும் போல அம்மைக்கும் அப்பனுக்கும் பிறந்தவர் தான். ஆயினும் அவர் மனிதர்களுக்கெல்லாம் மேம்பட்ட அவதார புருஷர் என்பதைக் காலம் காட்டிவிட்டது.

வள்ளற்பெருமான் திருவவதாரம் செய்ததன் காரணம் என்ன? இந்தக் கேள்விக்கு அவரே பதிலளிக்கிறார். அகத்தே கருத்துப் புறத்தே வெளுத்திருந்த அனைவரையும் திருத்தி, அவரை எல்லாம் சன்மார்க்கச் சங்கத்து அடைவித்திடத் தான் அவதரித்ததாக அடிகள் கூறுகிறார். அத்துடன் உலகோரெல்லாம் இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுமாறு செய்வதற்கென்றே, இறைவன் தம்மை இந்த ஜகத்திற்கு அனுப்பி வைத்ததாகக் கூறுகிறார். அதை அவரே சொல்லக் கேட்போம்.

‘அகத்தே கருத்துப் புறத்தே வெளுத்திருந்த உலகரனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்கச் சங்கத்து அடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுதற்கு என்றே எனை இந்த
யுகத்தே இறைவன் வருவிக்க உற்றேன் அருளைப் பெற்றேனே !’

எனவே இராமலிங்க அடிகள் பூமண்டலம் முழுதும் புரட்சி வெடித்து வந்த தெய்வத்தூதர் என்பதில் இரண்டு விதக்கருத்து இருக்க முடியாது.

*வள்ளலார் யாரிடம் கல்வி கற்றார்? எந்த அளவிற்குக் கல்வி கற்றார்? என்பதற்கு அவருடைய வரலாற்றில் சான்றுகள் இல்லை. ஓதாது உணர்ந்தவர் என்றுதான் உலகம் அவரைக் கருதுகிறது. அவருக்குத் தமிழிலும் வடமொழியிலும் நிறைபுலமை இருந்தது. அவர் யாரிடம் கல்வி கற்றார் என்பதை நாம் அறிந்து கொள்ள முடியவில்லை என்றாலும், அவர் உள்ளொளி பெற்ற மெய்ஞானி என்பதில் நம்பிக்கை உடையவர்கள் அவர் ஓதாது உணர்ந்தவர் என்பதை ஒப்புக்கொள்வார்கள்.*

*வள்ளல் பெருமான் தமது இளமைப் பருவத்தில் தென்தமிழ் நாட்டு தொன்முது கடவுளாகிய முருகப் பெருமானை வழிபடுகடவுளாக வகுத்துக் கொண்டார். சென்னையில் உள்ள கந்தகோட்டமே அவரது முதல் வழிபடு தல மாயிற்று. அங்குதான் அவர் பக்திப் பரவசமெய்திப் பாடத் தொடங்கினார். அவ்வாறு அங்குப் பாடிய 31 பாடல்கள் தெய்வமணி மாலையாகியது. அவற்றுள் ஒன்றைக் காண்போம்.*

*‘நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற*
*நிலனுண்டு பலனுமுண்டு*
*நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட*
*நெறியுண்டு நிலையு முண்டு*
*ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு*
*உடையுண்டு கொடையு முண்டு*
*உண்டுண்டு மகிழவே யுணவுண்டு சாந்தமுறும்*
*உளமுண்டு வளமு முண்டு*
*தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள*
*செல்வங்கள் யாவுமுண்டு*
*தேனுண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்*
*தியான முண்டாயி னரசே*
*தாருண்ட சென்னையிற் கந்த கோட்டத்துள்வளர்*
*தலமோங்கு கந்த வேளே*
*தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி*
*சண்முகத் தெய்வ மணியே’.*

*தெய்வமணி மாலையில், பாடல் தோறும் இறுதியில், "தண்முகத்துய்யமணி உண் முகச் சைவ மணி சண்முகத் தெய்வமணியே" என்று பூசை நேரத்தில் மணி அடித்து ஒலி எழுப்புவது போல, தம்முடைய பாடல்தோறும் மணி அடித்து ஒலி எழுப்பி, முருகனை வழிபடுகிறார் வள்ளலார்.*

*கந்தகோட்டத்தையடுத்து, தமது வழிபடு கடவுளாகிய முருகனை வழிபட, வள்ளலார் தேர்ந்தெடுத்த தலம் திருத்தணிகையாகும்.*

திருத்தணிகையைப் பார்க்க வேண்டும் என்பதில் தமக்கிருந்த தணியாத ஆவலை, "தணிகை மலையைச் சாரேனோ, சாமி அழகைப் பாரேனோ" என்று ஏக்கமும் இயலாமையும் கலந்த வண்ணம் பாடுகிறார்.



சென்னை ஏழு கிணறு வட்டத்தில் தமது குடும்பத்தார் குடியிருந்த இல்லத்தையே கோயில் ஆக்கிக் கொண்டார். மேல் மாடியில் ஒரு நிலைக் கண்ணாடியை நிறுவி அந்த கண்ணாடியில் கந்தப் பெருமானைக் காணத் தவம் கிடந்தார். முருகனும் அவருக்கு காட்சி தந்தார். எப்படி? ஆறுமுகங்களோடும், பன்னிரண்டு தோள்களோடும், வேலோடும், மயிலோடும், கோழிக்கொடியோடும் தணிகைக் குமரன் கண்ணாடியில் காட்சி யளித்தான். வள்ளற் பெருமான் கண்ணாரக் கண்டார். இதோ தாம் கண்ட தணிகை முருகனைத் தமிழர் அனைவருக்கும் காட்டுகிறார். காண்போம்.

சீர்கொண்டதெய்வ வதனங்க ளாறும் திகழ்கடப்பந்
தார்கொண்டபன்னிருதோள்களும்தாமரைத் தாள்களுமோர்
கூர்கொண்டவேலும் மயிலும்நற் கோழிக் கொடியுமருட்
கார்கொண்ட வண்மைத் தணிகாசலமு மென் கண்ணுற்றதே.

இந்த வாக்கிலே தான் எத்தகைய உணர்ச்சி.

மூர்த்தி பேதங்களில் கொண்டிருந்த நம்பிக்கை காரணமாகக் கோயில் கண்ட இடங்களில் எல்லாம் கும்பிட்டார். வடிவ பேதங்களை வாயாரச் சொல்லிச் சொல்லி அந்த வடிவங்கள் குறிக்கும் கடவுளரையெல்லாம் வாழ்த்தி வாழ்த்திப் பாடினார். உள்ளம் குளிரக் குளிர, நா இனிக்க இனிக்க, மெய்மயிர் சிலிர்க்கச் சிலிர்க்க, கணபதியைப் பாடினார்; கலை மகளைப் பாடினார்; திருமகளைத் துதித்தார்; ஒற்றியூர்ப் பெருமானை உள்கசிந்து உருகிப்பாடி

வழிபட்டார். ஆனால் நாளடைவில் பக்குவம் காரணமாக, அவரளவில் உருவம் கரைந்து அருவமானது. அருவ நிலையில் ஆண்டவனைத் தொழத் தொடங்கினார்.

உலகப் பற்றுக்களையெல்லாம் முற்ற முடியத் துறந்த வள்ளலார், தாய்மொழிப் பற்றை மட்டும் துறக்காமல், உறுதியாகப் பற்றிக் கொண்டிருந்தார்.

வள்ளலார் வடலூர் சென்ற பிறகுதான், சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களை, சாதி - மதம் - குலம் - கோத்திர வேறுபாடுகளை எதிர்க்கும் புரட்சிகரமான எண்ணங்களை வெளியிடலானார். வடலூரை அடுத்துள்ள மேட்டுக்குப்பத்தில், சித்தி வளாகம் என்ற பெயரில் திருமாளிகை அமைத்துக் கொண்டு, அங்கு தம்முடைய புரட்சிகரமான எண்ணங்களை - கொள்கைகளை- போதனை புரிந்தார்.

அடிகளுடைய கொள்கைகளில் தலையாயது அவர் உயிர்க் கொலையை வெறுத்ததாகும். இதிலே அவர் சமணரையும் மிஞ்சி விட்டார் என்று சொல்லலாம். ஆடு, கோழி, முதலிய எளிய உயிர்களைப் பலி கொடுப்பதாகப் பிரார்த்தித்து, கோயில்களில் உயிர்ப்பலி கொடுப்பதைக் கண்டபோதெல்லாம் அவரது நெஞ்சம் நடுக்குற்றது. அவ்வாறு பலிபெறும் கோயிலை, வெங்கோயில் என்றும், கலிகாலக் கோயில் என்றும் பழிக்கிறார். அந்தக் கோயிலில் உள்ள தெய்வத்தைச் சிறிய தெய்வம் என்கிறார். அவர் உயிர்க் கொலையை எதிர்த்துப் பாடிய பாடல்கள் ஆயிரத்திற்கும் மேல் இருக்கலாம்.

உயிர்கள்பால் கொண்ட கருணை காரணமாக பசியாலும் பட்டினியாலும் வருந்துகின்ற ஏழை மக்களுக்காகவும் வருந்தி வருந்திப் பாடினார். ஓரறிவு படைத்த புல் பூண்டு போன்ற தாவரங்களிடமும் கருணைகாட்டி, 'வாடிய பயிரை கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று கூறிய பெருமான் ஆறறிவு படைத்த மனிதர்கள் பசியாலும் பட்டினியாலும் வாடுவது கண்டு சகிப்பாரா சகிக்காமல் வீடுதோறிரந்தும் பசியறாது அயர்ந்த வெற்றரைக் கண்டு உளம் துடித்தார்.

‘வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினால் இளைத்தே
வீடுதோ ரறிந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்
நேர்உறக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னிகளாய் ஏழைகளாய்நெஞ்
சிளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்’.

பட்டினிக் கொடுமை மீது வள்ளலார் போர் தொடுத்தார். வடலூரில் 'சத்திய தர்மச்சாலை' என்ற பெயரில் பசிப்பிணி போக்கும் பாசறை அமைத்தார். பசியால் வருந்தி வரும் மக்களுக்கு அங்கு உணவு வழங்க ஏற்பாடு செய்தார். உணவு சமைக்கும் பணியை முதன் முதலில் தமது புனிதக் கரங்களினால் அடுப்புக்குத் தீ மூட்டித் தொடங்கி வைத்தார். அடிகள் மூட்டிய தீ அணையாமல் இன்னமும் எரிந்து கொண்டே இருக்கிறது.

மக்களெல்லாம் மதவேறுபாடின்றிக் கூடி இறைவழிபாடு செய்வதற்கென்று, வடலூர்ப் பெருவெளியில் பெருங்கோயில் ஒன்றை அமைத்தார். அதற்கு 'சத்திய ஞான சபை' என்று பெயரிட்டார். அங்கு எல்லாச் சமயத்தினரும் பேதமின்றிக் கூடி இறைவனை வழிபட வழி வகுத்தார்.

வள்ளலார் சாதி சமய வேறுபாடுகளை விட்டு மனிதகுலம் ஒருமைப்பாட்டோடு இருக்க வேண்டும் என்று வற்புறுத்தியதும் புலால் உணவை வெறுத்ததும் உயிர் குறையை கண்டித்தது எதற்காக மரணமிலாப் பெரு வாழ்வை மக்களெல்லாம் பெற வேண்டும் என்பதற்காகத்தான். வள்ளலார், தனது தவத்தால், ஜீவகாருண்ய ஒழுக்கத்தால், பூரண ஞானத்தால், மரணமில்லாப் பெருவாழ்வைப் பெற்றார்.

"தந்தையைக் கண்டேனென்றுந்தீபற; சாகா
வரம்பெற்றேனென்றுந்தீபர;"

என்பது அடிகள் வாக்கு.

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பது போல தான் பெற்ற மரணமில்லா பெருவாழ்வை, மனிதர் ஒவ்வொருவரும் பெற வேண்டும் என்று கருதியவராகி 'வம்மின் உலகியலீர்' எனக் கூவி அழைக்கிறார். அழைத்தவர் 'மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்' என்று உறுதி கூறுகிறார். நம்பாதவர்களைப் பார்த்து 'புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியம் சொல்கின்றேன்' எனக் கனிந்த மொழிகளால் கருணையோடு கூவி அழைக்கிறார். அவர் கூவி யழைப்பதைக் கேட்போம்.

‘நினைத்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனால் உடம்பு
நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மின்உல கியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே’.

நூலாசிரியராக - உரையாசிரியராக - பதிப்பாசிரியராக - போதகாசிரியராக - அருட்கவிஞராக - உள்ளொளி பெற்ற மெய்ஞானியாக - பசிப்பிணி மருத்துவராக - கொலையும் புலையும் தவிர்த்த கொள்கையாளராக - சாந்த சொரூபியாக - சாகாக் கல்வியை உணர்த்தியவராக - சாதி மத சமய வருணாசிரமத்தைக் கண்டித்து சன்மார்க்க வழியினை ஜகத்திற்கு அறிவித்தவராக - வேதங்கள் - ஆகமங்கள் - புராணங்கள் - அனைத்தும் சூதாகச் சொல்லப்பட்டன எனத் தெளிந்து துணிந்து ஒதுக்கித் தள்ளிய புரட்சியாளராக- எம்மதமும் சம்மதம் என்ற சமரசவாதியாக - விளங்கிய வள்ளற்பெருமான் உலகோர் கண்காண சரியாக ஐம்பதாண்டுகள் வாழ்ந்தார்.

சோழநாட்டில் மருதூரில் பிறந்து, தொண்டை நாட்டில் பொன்னேரியில் பாட்டியார் வீட்டில் வளர்ந்து, சென்னையம்பதியில் சில காலம் தங்கி, பின்னர் தில்லைப்பதியில் உறைந்து, இறுதியில் வடலூர் சென்று, அதனையடுத்துள்ள மேட்டுக்குப்பத்தில் சித்தி வளாக மாளிகை அமைத்து, உயிர்க்குலத்தை ஒருமைப்பாடுடையதாக்கப் பாடினார்; பாடுபட்டார்.



அவரது போதனைகளை மக்கள் செவிமடுத்தார்களா? என்றால் இல்லை என்று தான் வேதனையோடு சொல்ல வேண்டும். சலிப்புற்ற வள்ளலார், கடை விரித்தோம் - கொள்வாரில்லை - கட்டி விட்டோம்- என்று நெஞ்சம் நொந்து வேதனைப்படும் நிலைக்கு வந்தார். அந்நிலைக்கு வந்து அவர் தமது 51-வது வயதில் ஒரு நாள் நள்ளிரவில், சித்தி வளாகத் திருமாளிகையில் உள்ள ஓர் அறைக்குள் சென்று மறைந்து விட முடிவெடுத்தார். வள்ளற் பெருமான் மரணமிலாப் பெருவாழ்வு பெற்றிருந்தும், நம்மிடையே வாழ மனமின்றி மறைய எண்ணினார்.

எந்த மொழியைக் கொண்டு தேனாய்ப் பாகாய்த் தித்திக்கும் தெள்ளமுதாய் ஆறாயிரத்திற்கும் மேற்பட்ட அருட்பபாடல்களைப் பாடினாரோ அந்தத் தமிழை விட்டுப் பிரியத் துணிந்தார்.

எந்த நெஞ்சம் வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியதோ, அந்த நெஞ்சம், அருளுருவான நெஞ்சம், நம்மைத் துறக்கத் துணிந்தது.

எந்தத் திருக்கரங்கள் அடுப்பிற்குத் தீ மூட்டி பசிப்பிணி அகற்றியதோ அந்தத் திருக்கரங்கள் உலகோர் பார்வையிலிருந்து ஒளிந்து கொள்ளத் துணிந்தன.



எந்தத் திருவடிகள், தமிழகத்து மண்ணில் நடை போட்டு, நாட்டவரை மேல் நிலைக்கு உயர்த்த முற்பட்டதோ அந்தத் திருவடிகள், நம் கண்களிருந்து ஒதுங்கத் துணிந்தன.

30.01.1874 வெள்ளிக்கிழமை தைப்பூசத்தன்று நள்ளிரவில், சித்தி வளாகத் திருமாளிகையின் அறைக்குள் செல்வதற்கு முன்பு, அச்சமெல்லாம் தீர்ந்தேன் அருளமுதம் உண்கின்றேன் நிச்சலும் பேரானந்த நித்திரை செய்கின்றேனே என்ற பாடலைப் பாடி அரைக் கதவைத் தாழிட்டுக் கொண்டார். ஜீவன் முக்தராகிய வள்ளற்பெருமான் தன் பொன்னுடலை மண்ணுக்கோ, தழலுக்கோ இரையாக்காது, தன்னை அருளுருவாக்கிக் கொண்டு இறைவனோடு இரண்டறக் கலந்து கொண்டார்.

வள்ளற்பெருமான் மறைந்து விட்டாலும், அவரது கொள்கைகள் மறையவில்லை. அவர் வாழ்ந்த மண்ணில் நாம் வாழ்கிறோம். அவர் அமைத்த சத்திய ஞான சபையில் ஒளித்தேவனை வணங்கி வழிபடுகிறோம். அவர் மறைந்த சித்தி வளாகத் திருமாளிகையைப் பார்க்கிறோம். அவர் புனைந்த பாடல்களைப் பாடுகிறோம்; பாடக்கேட்கிறோம். ஒவ்வொரு தனி மனிதனும் வள்ளலாரின் கொள்கைகளை, கோட்பாடுகளை, வாழ்வில் கடைப்பிடித்தால் இவ்வையம் ஆன்மநேய ஒருமைப்பாடெய்தி, பேரின்பப் பெரு வெள்ளத்தில் திளைக்கும்.

# The Ramayana in Indonesia: Tradition, Adaptation, and Performance

**Dr. Chandrika Subramaniyan**
**Sidney, Australia**



Ramayanam around the World

Mahatma Gandhi once said, "Ramanama is for the pure in heart and for those who want to attain purity and remain pure." This sentiment reflects the enduring spiritual significance of the Ramayanam across cultures.

The Srimad Ramayanam, authored by Srimad Valmiki Maharshi, is widely regarded as an extraordinarily exquisite and propitious work. For thousands of years, it has served as a guiding light, illuminating the lives of the people of India.

Its fame extends far beyond India, influencing numerous regions and languages. The Ramayanam is available in many languages across India, with works like the Kamba Ramayanam in Tamil and the Tulsi Ramayanam in Hindi achieving immense popularity. In derivative poetry, each version of the Ramayanam is recognized for its own unique qualities.

Some are celebrated for their narrative style, while others stand out for their vivid depictions of episodes or scenes, memorable dialogues, rich characterization, or linguistic beauty. Some versions are admired for their stylistic excellence, grace, and vigor, while others emphasize the portrayal of specific emotions, such as pathos or valour, or focus on passionate devotion (Bhakti). As a result, each variant of the Ramayanam attracts a particular audience, with different segments of literary readership gravitating toward specific adaptations based on their individual preferences. The Ramayanam, a sacred Hindu text, resonates across cultures and religions due to its core values of virtue, love, loyalty, and unwavering devotion. Across time, poets have continually retold the story of the Ramayanam in their own styles and languages, embracing the native culture and this tradition continues today. The original Ramayanam by Valmiki has been

adapted or translated into various Indian regional languages like Telugu, Malayalam and Kannada. Many versions of the Ramayanam exist in different Indian languages, with some remaining faithful to Valmiki's narrative, while others explore peripheral stories or offer philosophical interpretations.The enduring influence of the Ramayanam around the World, in particular in Asian countries demonstrates the epic's profound cultural significance across generations. Beyond its religious significance, the Ramayanam has profoundly influenced global literature, inspiring numerous adaptations and interpretations across diverse cultures. Its valuable universal themes of duty, righteousness, and the eternal struggle between good and evil ensure its enduring relevance and timeless appeal.

In particular, the significance of Ramayanam has extended its influence beyond India to many other Asian countries, including Myanmar, Indonesia, Cambodia, Laos, the Philippines, Sri Lanka, Nepal, Thailand, Singapore, Malaysia, Japan, Mongolia, Vietnam, and China.

Researchers and scholars have noted that during the 5th and 6th centuries, the study of the Ramayanam flourished in places like Indonesia, Indo-China, Cambodia (Champa), Bali, Java, and other islands. Evidence of this widespread influence can be found in temple sculptures, stone inscriptions, the names of people, and societal traditions and symbols.The relevance of the Ramayanam in Southeast Asia is evident from its deep cultural impact, including the grand staging of its musical version during the opening ceremony of the 2017 ASEAN summit. Versions of the Ramayanam across Southeast Asia are rich in themes of bravery, romance, and adventure. However, in China, part of East Asia, the focus is more on the ethical and moral values conveyed in the epic. The Jataka tales of Ramanare popular in Chinese Buddhist tradition. The text Liudu ji jing offers an elaborate account of the Ramayanam, while Sun Wukong, the monkey-king in 'Journey to the West', shares traits with Anuman.

## The Arrival and Evolution of Hinduism in Indonesia

It is widely believed that Hinduism was introduced to Indonesia in the first century AD through traders, sailors, scholars, and priests. Over time, it integrated

with preexisting Javanese traditions, forming a distinct local interpretation of Hindu beliefs. The arrival of Buddhism in Sumatra during the sixth century further influenced this adaptation, leading to an Indonesian version of Hinduism.

However, with the decline of the Srivijaya and Majapahit empires, Hinduism gradually weakened in Indonesia, giving way to the rise of Islam. Despite this, Hindu traditions—particularly those linked to the Ramayana and Mahabharata—continue to thrive in Indonesian art, literature, and performance.




## Kakawin Ramayana: Indonesia's Unique Retelling

The Ramayana is believed to have arrived in Indonesia around the 8th or 9th century, giving rise to an old Javanese version known as the Kakawin Ramayana. Written in the Kawi (Old Javanese) language, this text played a key role in reviving Hindu traditions at a time when Buddhism had already taken root in Sumatra, West, and Central Java.

The Kakawin Ramayana was likely composed during the Medang Kingdom (732–1006 AD) in Central Java and later evolved into the Balinese Ramakavaca, a more

developed version of the epic. Javanese scholars consider the Kakawin Ramayana to be one of the finest examples of literary expression, and its influence is evident in the large number of preserved palm leaf manuscripts from Java and Bali.

Despite its origins in Indian literature, the Kakawin Ramayana differs significantly from the Sanskrit Ramayana. Scholars suggest that its first half closely follows the Bhattikavya, a 7th-century Sanskrit poem by Bhatti, while its second half diverges considerably, incorporating Javanese indigenous elements.

## Javanese Adaptations and Unique Characters

While key figures like Rama, Sita, Lakshmana, Hanuman, and Ravana remain central to the story, the Kakawin Ramayana introduces several indigenous Javanese deities. Notably, the Guardian God of Java, Semar (known as Twalen in Balinese tradition) and his four sons—the Punokawan ("clown servants")—play an important role in Javanese Wayang performances.

A major difference lies in the portrayal of Sita. In the Indian Ramayana, she is depicted as gentle, patient, and loyal, while in the Kakawin Ramayana, she is bold and strong, even fighting Asuras in Lanka instead of passively awaiting Rama's rescue. In Indonesian Wayang performances, Sita is often depicted with her chin raised in a defiant stance, signaling her strength and independence.

Additionally, Rama is portrayed as flawed, as he places trust in others over Sita's loyalty after her rescue. Hanuman, on the other hand, is a beloved character, frequently appearing in Javanese dance-dramas (Wayang Wong) and Balinese Hindu festivals (Odalan celebrations). His presence is also evident in archaeological sites, temple carvings, and manuscripts across Indonesia.

## Reliving the Ramayana Through Wayang and Dance

## Wayang Puppet Traditions

The Ramayana has remained an integral part of Indonesian culture, particularly among the Javanese, Balinese, and Sundanese. Beyond being a moral and spiritual guide, it has found a powerful medium of expression through Wayang (puppet theatre) and dance.

Wayang puppetry played a crucial role in embedding the Ramayana and Mahabharata into Indonesian cultural heritage. The most prominent forms include:

- Wayang Golek (wooden rod puppets) of the Sundanese
- Wayang Kulit (leather shadow puppets) of the Javanese and Balinese

Both draw heavily from localized versions of these epics. The Ramayana also serves as inspiration for Wayang Wong (human theatre), which blends acting, dance, and music.



Despite Islam being the dominant religion in Java, these performances have endured as a cherished form of storytelling and entertainment.

**Ramayana in Dance and Performance**

**The Kecak Dance of Bali**

In Bali, the Kecak dance brings the Ramayana to life, with performers taking on the roles of Rama, Sita, Lakshmana, Jatayu, Hanuman, and Ravana. The performance includes a fire sequence, symbolizing Hanuman's burning of Lanka.

**The Ramayana Ballet at Prambanan**

In Yogyakarta, the Wayang Wong dance-drama is performed as the Ramayana Ballet, an extravagant retelling of the epic. Staged at the Trimurti Prambanan open-air theatre, the performance takes place against the stunning backdrop of the Prambanan Temple, enhancing its grandeur.

Through Wayang, dance, and literature, the Ramayana remains a living tradition in Indonesia, blending myth, movement, and cultural heritage. Its adaptation through Kakawin Ramayana, Wayang performances, and traditional dances demonstrates how an ancient Indian epic has evolved into a uniquely Indonesian masterpiece, cherished for centuries.

# திருமழிசை ஆழ்வார் பாசுரங்களில் திருமாலின் ஐந்து நிலைகள்

**ஜனக்புரி சீனிவாசன்,**
*தமிழாசிரியர்(ஓய்வு).*



*உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துள்ள இறைவன் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி அர்ச்சை என ஐந்து நிலைகளில் இருப்பதாக வைணவ உலகு கூறுகிறது. மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் பாசுரங்களில்தேனினுமினிய தீந்தமிழில் இவ்வைந்து நிலைகளையும் போற்றிப் பாடியுள்ளனர்.*

***பரம்***

*மோட்ச உலகு பரமபதம். அந்தமில் பேரின்ப நல்லதோர் வீடு, திருநாடுஎனப் பலவாறாக பரமபதத்தை வழங்குவர். ஸ்ரீவசனபூடனம் ,"ஆவரண ஜலம்போலவேபரத்வம்" என்கிறது. பூவுலகைக் காட்டிலும் மும்மடங்கு பெரியதாம். "திரிபாத் விபூதி" என்பர். நித்ய சூரிகளாலும் முத்தர்களாலும் மட்டுமே வணங்கப் படுவது என்பர்.*

*பிரகிருதி மண்டலத்துக்கு அப்பால் விரஜா நதிக்கரையில் சுத்த சத்வமாய் ஆதியஞ்சோதி யுருவான திருமேனி உடையவனாய் , திருவனந்தாழ்வான் அரியணையில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி அடிவருட அந்தமில் பேரின்பத்து அடியார்களாகிய நித்யசூரிகளும் முத்தர்களுமே தொண்டு செய்ய எம் பெருமான் தனிச் செங்கோல் செலுத்திவரும் பரமபதத்தை திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதி 10 ஆம் பாசுரத்தில்*

*ஆங்காரவாரமுது கேட்டு அழலுமிழும்*
*பூங்காரரவணையான் பொன்மேனி யாம்காண*
*வல்லமேயல்லமே? மாமலரான் வார்சடையான்*
*வல்லரேயல்லரே வாழ்த்து"*

*என்றும் அருளிச் செய்துள்ளார். 19 ஆம் பாசுரத்தில் " வைகுந்தம் ஈப்பாயும் எவ்வுயிர்க்கும் நீ" என எம்பெருமானின் பரமபத நிலையைக் காட்டுகிறார்.*

*பரமபதத்தை அடைய வேண்டுவார் வேங்கடத்தான் திருவடிகளில் மலர்தூவி வழிபடுங்கள் என 90ஆம் பாசுரத்தில் தெரிவிக்கிறார்.95 ஆம் பாசுரத்தில்*

*ஏன்றேனடிமை இழிந்தேன் பிறப்பிடும்பை*
*ஆன்றேன் அமரர்க்கமராமை ஆன்றேன்*
*கடன்நாடும் மண்ணாடும் கைவிட்டு மேலை*

*இடநாடு காண இனி" என எம்பெருமானுக்குத் தொண்டு செய்தால் பிறவிப்பிணி நீங்கி பரமபதம் கிடைக்குமென தெளிவு படுத்துகிறார்.*

*அதைப் போலவே திருச்சந்த விருத்தம் 8 ஆம் பாசுரத்திலும்*
*ஆதியானவானவர்க்கும் அண்டமாய அப்புறத்து*
*ஆதியான வானவர்க்கும் ஆதியான ஆதிநீ*
*ஆதியானவானவாணர் அந்தகாலம் நீ உரைத்தி*

*ஆதியானகாலநின்னை யாவர்காண வல்லரே!" என பரமபதத்திலிருக்கும் அனைவருக்கும் அதிபதி அவனே என்கிறார். சண்டமண்டலத்தினூடு சென்று வீடுபெற்று மேல்கண்டு வீடிலாதகாதல் இன்பம் நாளும் எய்த புண்டரீகபாத புண்யகீர்த்தி நும் செவிமடுத்து உண்டு நும்உறுவினைத் துயருள்நீங்கி உய்ம்மின் என்பதன்மூலம் எம்பெருமானின் திருப்புகழைக்கேட்பதே தீவினை நீங்கி பரமபதம் அடையும் வழி என்கிறார்.*

*பத்தினோடு பத்துமாய் ஓரேழினோடுஒரொன்பதாய்*
*பத்தினால் திசைக்கண் நின்ற நாடுபெற்ற நன்மையாய்*
*பத்தினாய தோற்றமோடு ஓராற்றல்மிக்க ஆதிபால்*
*பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே!" என பெருமாளிடம் பத்தி உடையவர்க்கே பரமபதம் கிடைக்கும் என்கிறார்.*

*வேறொன்றின்மீதும் பற்றில்லாதவரே பரமபதம் அடையத் தகுவர் என்கிறார். 108ஆம் பாசுரத்தில் பரமபதம் அடையக் கொள்ளும் ஆசை ஒன்றே போதும் என்கிறார்.*

**வியூகம்**

*திருப்பாற்கடலில் கண்வளரும் பரமனின் நிலையே வியூகமாகும்.பாற்கடல் போலே வியூகம் என்கிறது ஸ்ரீவசனபூடனம். உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் ஆகிய தொழில்களைச் செய்துகொண்டு,சங்கர்ஷணன்,பிரத்யும்னன், அநிருத்தன் என்னும் மூன்று வடிவில் எழுந்தருளியிருந்து திருநாபிக் கமலத்தினின்று பிரம்மனைப் படைத்ததோர் எழில் வடிவில் பரவாசுதேவனாக, பாற்கடல்நாதன் எழுந்தருளியிருக்கும் நிலை வியூக நிலை என்பர்.*

*பரவாசுதேவன் ஞானம்,பலம், ஐஸ்வர்யம், வீர்யம்,சக்தி, தேஜஸ், என்னும் ஆறு குணங்கள் உடையவராய், சங்கர்ஷனர் ஞானம் ,பலம் என்னும் இரண்டு*

குணங்களைக் கொண்டவராய், பிரத்யும்னர் ஐஸ்வர்யம், வீர்யம் என்னும் இரண்டு குணங்களைக் கொண்டவராய், அநிருத்தர் சக்தி தேஜஸ் என்னும் இரண்டு குணங்கள் கொண்டவராய் எம்பெருமான் திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் நிலையில் வியூகத்தில் காட்சியளிப்பதாக புராணங்கள் கூறுகின்றன.



இந்த நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும்மூன்று கிளைப் பிரிவுகளைக் கொண்டதாகக் கூறுவர். இவையே எம்பெருமானின் கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்னும் பன்னிரு திருநாமங்களைக் கொண்டவராய், ஒவ்வொரு நிலையிலும் மூன்று மூன்று திருநாமங்களை உடையவராய்க் காட்சியளிப்பதாகக் கூறுவர்.

வைணவர்கள் இவற்றிற்கு அறிகுறியாக இத்திருநாமங்களைச் சொல்லியவாறே உடலில் பன்னிரண்டு இடங்களில் திருமண் காப்பிட்டுக் கொள்வர். எம்பெருமானின் ஆறு திருக் குணங்களும் நான்கு மூர்த்திகளாய் இருந்து செயல்படுவதாக திருமழிசைப்பிரான் திருச்சந்தவிருத்தம் 17 ஆம் பாசுரத்தில்,

" ஏகமூர்த்தி, மூன்று மூர்த்தி நாலுமூர்த்தி நன்மைசேர்
போகமூர்த்தி புண்ணியத்தின் மூர்த்தி எண்ணில் மூர்த்தியாய்
நாகமூர்த்தி சயனமாய் நலங்கடல் கடந்து மேல்
ஆகமூர்த்தி ஆயவண்ணம் என்கொல்? ஆதிதேவனே"
என அருளிச் செய்துள்ளார்.

அதுமட்டுமல்லாமல் " தடங்கடல் பணத்தலை செங்கண் நாகணைக் கிடந்த செல்வமல்கு சீரினாய்"(15)

"பானிறக் கடல் கிடந்த பத்மநாபன் அல்லையே" (23)

பௌவநீர் படைத்தடைத்து அதில் கிடந்து முன் கடைந்த பெற்றியோய்" (28) என்றும் இவ்வியூக நிலையைக் குறிப்பிடுகிறார்.

" விடத்தவாய் ஒராயிரம் இராயிரம் கண் வெந்தழல்
விடுத்துவீழ் விலாதபோகம் மிக்கசோதி தொக்கசீர்
தொடுத்து மேல்விதானமாய பௌவநீர் அராவணை
படுத்தபாயல் பள்ளி கொள்வது என்கொல் வேலைவண்ணனே!(திருச்.18)

என்னும் பாசுரத்தில் எம்பெருமான் ஆதிசேடன்மீது பள்ளிகொண்டிருக்கும் திருக்கோலத்தை இயம்புகிறார்.

**விபவம்**

எம்பெருமானின் அவதார நிலையைக் குறிப்பது விபவம் ஆகும்.'பெருக்காறுபோல விபவங்கள்' என்கிறார் உலகாரியன் ஸ்ரீவசனபூடணத்தில். ஒப்பாரும் மிக்காருமில்லாத மாமாயனாகிய எம்பெருமான் உலகை வாழ்வித்தற் பொருட்டு, மறம் மலந்தபோது அறம் நிலைநாட்ட எத்தனையோ அவதாரங்கள் எந்நின்ற யோனியுமாக அவதரித்தாலும் முக்கியமாக மச்ச(மீன்), கூர்ம( ஆமை), வராக(பன்றி) நரசிம்ம,வாமன, பரசுராம, இராம, பலராம, கிருஷ்ண, கல்கி என பத்து அவதாரங்களைக் குறிப்பிடுகின்றனர்.

எல்லா ஆழ்வார்களும் ஆசார்யர்களும் இவ் விபவ அவதாரத்தில் நெஞ்சைப் பறிகொடுத்து, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி மயர்வற மதிநலம் அருளப் பெற்றவராய் எம்பெருமானுக்குப் பாமாலையாகிய பூமாலை சூட்டி அழகு பார்த்தனர்.

**மச்சாவதாரம்**



துன்னிய பேரிருள் சூழ்ந்து உலகைமூட
மன்னிய நான்மறை முற்றும் மறைந்திட
பின்னிவ் வுலகினில் பேரிருள் நீங்க அன்று
அருமறை தந்தானே அச்சோ அச்சோ"

என பெரியாழ்வார், மதுகைடபர்கள் என்னும் அசுரர்கள் பிரம்மனிடமிருந்து வேதத்தைப் பறித்துக்கொண்டு கடலடியில் ஒளித்து வைக்க , இருள் மூடிய இவ்வுலகைக் காக்க எம்பெருமான் மச்சாவதாரம் எடுத்து ஆழ்கடல் சென்று அருமறை மீட்டுத்தந்த செய்தியை வெளிப்படுத்துகிறார்.(பெரியாழ்வார் திருமொழி10 )

*திருமழிசை ஆழ்வாரும் திருச்சந்த விருத்தத்தில் " மீனாய் உயிரளிக்கும்" "அம்புலாவு மீனுமாகி" எனவும் இவ் அவதாரத்தை வெளிப்படுத்துகிறார்.*

*அம்புலாவு மீனுமாகி ஆமையாகி ஆழியார்*
*தம்பிரானுமாகி மிக்கது அன்புமிக்கு அதன்றியும்*
*கொம்பராவு நுண்மருங்குல் ஆயர்மாதர் பிள்ளையாய்*
*எம்பிரானும் ஆயவண்ணம் என்கொலோ? எம் ஈசனே!*

*என திருச்சந்தவிருத்தம் 35 ஆம் பாசுரத்தில் ஆழ்வார் விபவ அவதாரத்தை வியந்து போற்றுகிறார்.*

**கூர்ம அவதாரம்**



*அமிர்தம்பெற, தேவர்கள் அசுரர்களுடன் சேர்ந்து மந்திரமலையை மத்தாகவும் வாசுகி என்னும் பாம்பை நாணாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தபோது மந்திரமலை அச்சுமுறிந்து கடலில் சாய எம்பெருமான் கூர்மமாக(ஆமைவடிவெடுத்து) தன் முதுகால் மலையை நிலைநாட்டி, அவர்கள் பாற்கடல் கடைந்து அமிர்தம் பெற வழிசெய்ததாக புராணங்கள் கூறுகின்றன.*

*திருமழிசைப்பிரான் இவ் அவதாரத்தைப் பல பாசுரங்களில் பாடிப் பரவசமெய்துகிறார்.*

*" கூசமொன்று மின்றி மாசுணம் படுத்து வேலைநீர்*
*பேசநின்ற தேவர் வந்து பாடமுன் கிடந்ததும்*
*பாசம்நின்ற நீரில் வாழும் ஆமையான கேசவா!*
*ஏச அன்றுநீ கிடந்தவாறு கூறுதேறவே!(20)*

*எனவும்*

*அரங்கனே ! தரங்கநீர் கலங்க அன்று குன்றுசூழ்*
*மரங்கள்தேய மாநிலம் குலுங்க மாசுணம் சுலாய்*
*நெருங்கநீ கடைந்தபோது நின்றசூரர் என் செய்தார்?*
*குரங்கையாளுகந்த எந்தை! கூறு"*

*எனவும்88ஆவது பாசுரத்திலும் வெள்ளைவேலை வெற்பு நாட்டி வெள்ளையிற்றராவளாய் அள்ளலாய்க் கடைந்த அன்று அருவரைக்கொராமையாய் உள்ளநோய்கள் தீர் மருந்து வானவர்க்களித்த எம்வள்ளல் என வெளிப்படுத்துகிறார்.*

*நான்முகன் திருவந்தாதி49 ஆம் பாசரத்தில்*

*" மலை ஆமைமேல் வைத்து வாசுகியைச்சுற்றி*
*தலையாமைதான் ஒருகைபற்றி அலையாமல் பீறக்கடைந்த பெருமான்"*

*எனவும் கூர்மாவதாரத்தை அனுபவிக்கிறார்.*

*வேலைநீர் படைத்தடைந்ததில் கிடந்து முன்கடைந்த நின்தனக்கு அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சலென வேண்டுமே எனத் தான் எம்பிரானுக்கு அடைக்கலம் புகுந்தமையை வெளிப் படுத்துகிறார்.*

**வராக அவதாரம்**



*இரணியாட்சன் என்ற ஒரு அசுரன் பூமியைப் பாயாக சுருட்டிப் பாதாள உலகத்தில் மறைத்து வைக்க, தேவர்களும் முனிவர்களும் எம்பெருமானிடம் முறையிட பாற்கடலில் பள்ளி கொண்டிருந்த பரமன் அவர்கள் வேண்டுதலைச் செவிமடுத்து வராக வடிவெடுத்து பாதாளத்தைக்கீறி தன்னை எதிர்த்த இரணியாட்சனை வதைத்து பூமிப் பிராட்டியைத் தன் கோட்டிலேயே கொண்டுவந்து நிறுத்தினான்.*

*நீலவரையிரண்டும் பிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப*
*கோலவராகமொன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்*

*என நம்மாழ்வார் போற்றுகிறார்.*

*கோதைபிராட்டி*
*பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்*
*மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்*

*என நாச்சியார் திருமொழியில்(11-8) போற்றிப் பாடியுள்ளாள்.*

*திருமழிசை ஆழ்வாரும் திருச்சந்தவிருத்தம் 48 ஆம் பாசுரத்தில்*
*குன்றினின்று வானிருந்து நீள்கடல் கிடந்து மண்*
*ஒன்று சென்றதொன்றையுண்டு அதொன்றிடந்து பன்றியாய்*
*நன்றுசென்றநாளவற்றுள் நல்லுயிர் படைத்தவர்க்கு*
*அன்று தேவமைத்தளித்த ஆதிதேவனல்லையே*

*என்றும்*

*61ஆம் பாசுரத்தில்*

*நடந்தகால்கள் நொந்தவோ? நடுங்கஞாலம் ஏனமாய்
இடந்தமெய் குலுங்கவோ? விலங்குமால்வரைச்சுரம்
கடந்தகால்பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்திருந்துபேசு வாழிகேசனே! எனவும் வியந்து போற்றுகின்றார்.
அதைப்போலவே 114 ஆவது பாசுரத்திலும்
...ஞானமாகி ஞாயிறாகி ஞாலமுற்றுமோர் எயிற்று
ஏனமாயிடந்த மூர்த்தி எந்தைபாதம் எண்ணியே*

*எனப் போற்றுகிறார்.*

*நான்முகன் திருவந்தாதியிலும்
தான் ஒருவனாகித் தரணியிடந்தெடுத்து
ஏனொருவனாய் எயிற்றில் தாங்கியதும்(70) எனப் பாடுகிறார்.*

**நரசிம்மாவதாரம்**



*கோலவராகமெடுத்து இரணியாட்சனை வதைத்த எம்பெருமான், பல வரங்களைப் பெற்று, மனிதர்களாலும் விலங்குகளாலும் ,பகலிலும் இரவிலும்,பூமியின் மேலும் கீழும்தனக்கு அழிவே வரக்கூடாதுஎன வரம் பெற்றவனைவதைக்க அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கோர் வளர்ந்திட்ட செங்கட் சீயமாய் வள்ளுகிரால் ஒண்மார்வம் பிளந்த அவதாரம் நரசிம்மாவதாரம்.*

*திருமழிசை ஆழ்வார் திருச்சந்தவிருத்தம் 23ஆம் பாசுரத்தில்*

*"வால் நிறத்ததோர் சீயமாய் வளைந்தவாயெயிற்றவன்
ஊன்நிறத்துகிர்தலம் அழுத்தினாய்" எனப் பாடுகிறார்.*

*எம்பெருமானுடைய உள்நோக்கத்தை யாரால் உணரமுடியும் எனக் கேட்கப் புகுந்த ஆழ்வார்*

*வரத்தினில் சிரத்தைமிக்க வாளெயிற்று மற்றவன்
உரத்தினில் கரத்தை வைத்து உகிர்த்தலத்தை ஊன்றினாய்
இரத்திநீயிதென்னபொய்? இரந்தமண் வயிற்றுளே கரத்தி, உன்கருத்தை யாவர் காண வல்லவர் கண்ணனே!(25)*

*என்னும் பாசுரத்தில் நரசிம்மாவதாரத்தை அருளிச் செய்துள்ளார்.*

நான்முகன் திருவந்தாதியிலும் இரணியனை வதைக்க எம்பெருமான் எடுத்த இந்த அவதாரத்தை

மாறாய தானவனை வள்ளுகிரால் மார்விரண்டு
கூறாகக் கீறிய கோளரியை"

எனப் பாடுகிறார். அழகியான் தானே!அரியுருவன்தானே! என அவனழகில் மயங்கி விடுகிறார் ஆழ்வார்.

**வாமனாவதாரம்**



மாவலியின் செருக்கறுக்க மாதவன் எம்பெருமான் தொழுநீர்வடிவில் அதிதி வயிற்றில் குறளுருவாய் அவதரித்தார்.

மாவலியிடம் தன் திருவடியால் மூவடிமண் கேட்டு, குலகுரு சுக்கிராச்சாரியார் எவ்வளவோ எடுத்துச் சொல்லித் தடுத்தும் கேளாத மாவலி யிடமிருந்து நீர்வார்த்து மூவடிமண் பெற்றான் எம்பெருமான்.

ஓங்கியுலகளந்த உத்தமனாய் ஈரடியால் மூவுலகளந்து,ஓரடிக்காக மாவலியில் தலைமேல் திருவடி வைத்து அவனைப் பாதாள உலகில் அழுத்தி அவன் செருக்ககற்றினார். இந்த வாமன அவதாரத்தை ஆழ்வார்கள் பரக்கப் பாடியுள்ளனர்.

அன்றிவ் வுலகமளந்தாய் அடிபோற்றி என ஆண்டாள் அவன் திருவடிக்கு மங்களாசாசனம் செய்கிறாள்.

ஓங்கி உலகளந்த உத்தமன் எனப் பாராட்டுகிறாள்.

மற்றைய ஆழ்வார்களைப் போலவே திருமழிசைப்பிரானும் நான்முகன் திருவந்தாதியில்" வகையால் மதியாது மண்கொண்டாய் மற்றும் வகையால் வருவதொன்றுண்டே" என மாயம் செய்து மண்ணளந்தமால் என உன்மேன்மைக்கு இழுக்கென்றறிந்தும் , அதைச் சிறிதும் எண்ணாமல் மாவலியின் யாகசாலைக்குச் சென்று மூவடி மண்கேட்டுப் பெற்று அவன் செருக்ககற்றிய உன் செயலினால் உனக்கு ஏதேனும் பலன் உண்டோ என வியந்து போற்றுகிறார்.

திருச்சந்தவிருத்தத்திலும்

"எண்கடந்த யோகினோடு இரந்து சென்று மாணியாய்

*மண்கடந்தவண்ணம் நின்னை யார்மதிக்க வல்லரே(27)*

*எனக் கேட்டுழதோடு, காணி பேணும் மாணியாய்க் கரந்து சென்ற கள்வனே! எனவும் வியக்கிறார்.*

*வாமனனின் திருவடி தொழுதால் உண்டாகும் பேற்றினை*
*" அறிந்தறிந்து வாமனன் அடியினை வணங்கினால்*
*செறிந்தெழுந்த ஞானமொடு செல்வமும் சிறந்திடும்" என்கிறார்.*
*செருக்ககற்றும் எம்பெருமானின் அவதாரச் சிறப்பினை,*
*சுருக்குவாரையின்றியேசுருங்கினாய் சுருங்கியும்*
*பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்*
*செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்த தேவதேவனென்று*
*இருக்குவாய் முனிக்கணங்கள் ஏத்தயானும் ஏத்தினேன் (திருச்சந்தவிருத்தம்109)*

*எனப் போற்றுகின்றார்.*

**பரசுராம அவதாரம்**



*தந்தைசொல் மிக்க மந்திரமில்லை என்பதைக் கடைப்பிடித்த பரசுராமர், கார்த்தவீர்யார்ச்சுனனால் தந்தைக்கு நேர்ந்த கதியைத் தாய்மூலம் அறிந்ததும் 21 தலைமுறை சத்திரியர்களை க் கொன்றொழிப்பேன் எனச் சபதம் பூண்டு அறநெறி தவறிய அரசர்களையெல்லாம் அழித்தொழிப்பேன் என ஆவேசம் பூண்டெழுந்தார். விட்டுனுவின் அம்சமான இவர் சீதையை மணம் முடித்து சானகிராமனாக அயோத்தி திரும்புகையில் இராமபிரானால் அடங்கப்பட்டவராய் தவம் செய்ய இமயம் நோக்கிப் புறப்பட்டார்.*

*இந்தப் பரசுராம அவதாரத்தை திருமழிசை ஆழ்வார், திருச்சந்தவிருத்தம்79 ஆம் பாசுரத்தில் குறிப்பாகக் காட்டியுள்ளார்.*

**இராம கிருஷ்ணாவதாரம்**

*எம்பெருமானின் விபவாவதாரத்தில் இராமகிருஷ்ண அவதாரத்தையே எல்லா ஆழ்வார்களும் விரும்பிப் போற்றிப் பாடியுள்ளனர்.*

*பெரியாழ்வாரும், ஆண்டாளும், நம்மாழ்வாரும் கண்ணனிடத்திலேயே மையல் கொண்டிருந்தனர். குலசேகர ஆழ்வாரும் திருமங்கை ஆழ்வாரும் இராமபிரானிடம் ஈடுபாடு கொண்டிருந்தனர் எனத் தெரிகிறது. தேனினும்*

*இனிய தீந்தமிழில் தெவிட்டாத தெள்ளமுதாய் ஈரச்சொற்களால் பாமாலையாகிய பூமாலை சூட்டி மகிழ்ந்தனர். அர்ச்சையிலும் விபவத்தைக் காணச் செய்கின்றன அவர்தம் பாசுரங்கள்.*



*திருமழிசை ஆழ்வாரும் திருச்சந்த விருத்தத்தில் 19இடங்களிலும், நான்முகன் திருவந்தாதியில் 7 இடங்களிலும் இராமாவதாரத்தைப் பாடியுள்ளார்.*

*அதேபோல கண்ணபிரானின் குழந்தைப்பருவ லீலைகளை "காய்த்தநீள் விளங்கனியுதிர்த்து"என்னும் பாசுரத்தில்(37)*

*பாடிப் பரவுவதோடு, "வெற்பெடுத்து மாரிகாத்த மேகவண்ணனல்லையே" என கண்ணனின் பால லீலைகளை ஆழ்ந்து அனுபவிக்கிறார்.*

*திருச்சந்தவிருத்தம் 89ஆம் பாசுரத்தில்*
*பார்மிகுத்தபாரமுன் ஒழிச்சுவான் அருச்சுனன்*
*தேர்மிகுத்து மாயமாக்கி நின்று கொன்று வென்றிசேர்*
*மாரதர்க்கு வான்கொடுத்து வையம் ஐவர்பாலதாம்*
*சீர்மிகுத்த நின்னலால் ஓர்தெய்வம் நான் மதிப்பனே?*

*என பாரதப்போரில் அருச்சுனன் ஜயந்திரனை அழிக்க வேண்டி கண்ணன், ஆழிகொண்டு ஆழி (இரவி) மறைத்த செயலை வியந்து போற்றுகிறார்.*

*நான்முகன் திருவந்தாதி 33 ஆம் பாசுரம் ஒன்றிலேயே கண்ணன் நிகழ்த்திய ஐந்து லீலைகளில் தம் நெஞ்சத்தைப் பறிகொடுத்ததாகப் பாடுகிறார்.*

**அந்தர்யாமித்வம்**

*விபவ அவதாரத்தை விளக்கியது போல அந்தர்யாமித்வத்தையும் (மறைந்திருக்கும் தன்மையை) ஆழ்வார் பாசுரங்களில் காணமுடிகிறது.இதயகமலத்தில் இறைவனை வைத்துத் துதிக்கும் பாங்கினை உணரமுடிகிறது.நெஞ்சுநிறையப் புகுந்தான் என்பார் ஆழ்வார்கள்.*



*நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என்நெஞ்சுளே"*

*(திருச்சந்தவிருத்தம் 64) என்றும்," முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்*

*எத்தினால் இடர்க்கடல் கிடத்தி? ஏழைநெஞ்சமே!(115) என்றும் எம்பெருமானின் அந்தர்யாமித்துவத்தைப் பாடியுள்ளார். என்றும் மறந்தறியேன் என் நெஞ்சத்தே வைத்து நின்றும் இருந்தும் நெடுமாலைக் கருவிருந்த நாள்முதலாக காப்பாக வைத்துத் தொழுவதாக (92) அந்தர்யாமித்துவத்தைப் பரக்கப் பாடியுள்ளார்.*

**அர்ச்சை நிலை**

*ஆழ்கிணற்று நீர்போல எப்பொழுது வேண்டுமானாலும் அனுபவிக்கக் கூடியநிலை அர்ச்சாவதார நிலை. ஒருசிலரால் மட்டுமே அனுபவிக்கக் கூடியது என்றில்லாமல் எல்லோராலும் எக்காலத்தும் அனுபவிக்கக் கூடிய நிலையில் எம்பெருமான் திருத்தலங்கள் தோறும்(பரமபதம்,திருப்பாற்கடல் தவிர 106 திருத்தலங்களில்) அர்ச்சையில் சேவை சாதிக்கிறார்.*

*"தேங்கின மடுக்கள் போல அர்ச்சாவதாரம் " என்கிறது ஸ்ரீவசனபூஷனம்.*

*ஆழ்வார்கள் தாங்கள் அனுபவித்த பல்வேறு திவ்யதேசத்து எம்பெருமானைப் பலவாறாக போற்றிப் பாடியுள்ளனர்.*

*நாகத்தணைக் குடந்தை வெஃகா திருவெவ்வுள்*
*நாகத்தணை அரங்கம் பேரன்பில்"*

*என்றும்,*

*நின்றது எந்தை ஊரகத்து இருந்தது எந்தை பாடகத்து*
*அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாதமுன்னெலாம்*
*அன்றுநான் பிறந்திலேன்*
*பிறந்தபின் மறந்திலேன்*
*நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என்நெஞ்சுளே(திருச்சந்தவிருத்தம் 64 )*

*என்றும் எம்பெருமானைச் சேவிக்கும் பாக்கியம் கிடைக்காத நாளைத் தான் பிறவாத நாள் என்றும் எம்பெருமான் திருவருள் கிடைக்கப் பெற்றநாள் முதலே தாம் பிறந்த நாளாகவும் குறிப்பிடும் திருமழிசைப்பிரான் பாசுரங்களில் எம்பெருமானின் ஐந்து நிலைகள் பரக்கப் பேசப்பட்டுள்ளதை அவர்தம் பாசுரங்கள் கொண்டு ஒருவாறு உணரமுடிகிறது. அர்ச்சை நிலையில் கொலு வீற்றிருக்கும் எம்பெருமானின் திருத்தலங்களைத் தரிசித்து திருமாமகள் கேள்வன் திருவருள் பெறுவோமாக!*



*ஆழ்வார் திருவடிகளே சரணம்.*

# சுட்டு



**பேரா.கு.இராமகிருட்டினன்,**
*முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,*
*தெ,இ,மொ,துறைத்தலைவர்,*
*பஞ்சாபு பல்கலைக்கழகம்,*
*சண்டிகர்-160014*

***அ,இ,உ,எ (யா):***

*அ, இ, உ,எ(யா)என்ற வெழுத்துகளில் தொடங்கும் இடம்,காலம்பற்றிய சொற்களை ஆயலாம் என்றெண்ணுகிறேன், இவை சுட்டெழுத்துகள். முழு ஆய்வன்று; என் எண்ணக்கீற்றுத்தான். பிறர் முழு ஆய்வு செய்வார்கள் என்றெண்ணுகிறேன்.*

*அ என்றவெழுத்தில் தொடங்கும் சொற்கள் சேய்மையைக் குறிக்கும். இ என்றவெழுத்தில் தொடங்கும் சொற்கள் அண்மையைக் குறிக்கும்.உ என்றவெழுத்தில் தொடங்கும் சொற்கள் இவ்விரண்டற்கும் இடைப்பட்டதைக் குறிக்கும். உ என்றவெழுத்தில் தொடங்கும் சொற்கள் தற்போது தமிழகத்தில் வழக்கத்திலில்லை; ஆனால் யாழ்ப்பாணத்தில் வழக்கத்திலுள்ளதாக அறிகிறேன். எ(யா) என்றவெழுத்தில் தொடங்கும் சொற்கள் வினாவைக் குறிக்கும்.*

*அ, இ, உ என்ற மூவெழுத்தும் ஆ, ஈ, ஊ என நீண்டும் சுட்டும். எ.டு ஆங்கு, ஈங்கு, ஊங்கு. ஆனால் எ எனும் வினாவெழுத்து யா என நீளும். எ.டு . யாங்கு? மேலும் அங்கு, இங்கு, என்பன முறையே ஆண்டு, ஈண்டு என்றும் வழங்குகின்றன. ஆண்டு என்பது காலத்தைக் குறிக்க ஆட்டை எனவும் வழங்கும்.எ.டு. ஓர்யாட்டை, ஐயாட்டை. அன்று என்பது காலத்தைக் குறிக்க அற்றை ( அற்றைத்திங்கள் அவ்வெண்ணிலவில்), இற்றைக் கூத்தர் எனவும் வழங்கும். ஆண்டு என்பது யாண்டு ( யாண்டு பலவாக)என்றும், யாண்டும் ( எங்கும்-- யாண்டும் காணேன் மாண்டக்கோனை) என்றும் வழங்குகின்றது.*

**ஆண்டு என்பது இடத்தையும் காலத்தையும்குறிக்கும்**

*''ஆண்டு-- "அவ்விடம்; that place, there. ஆண்டு மஃதொப்பதில்" (குறள், 363);*

*பன்னிரண்டு மாதம் அல்லது 365 நாள் கொண்ட ஆண்டு என்னும் கால அளவு. year". --செ.சொ. பேரகரமுதலி.*

‘ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர நின்ற இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது. ஆங்குக் கொண்டான், ஈங்குக்கொண்டான், ஊங்குக்கொண்டான், யாங்குக்கொண்டான் ....என வரும்’.(தொல்.எழு. நச். 427).

‘யாங்கு கொண்டான், சென்றான்.......என வரும். இஃது எப்படி என்னும் வினாப்பொருளை உணர்த்திற்று. உம்மையான் மிக்கு முடிதலே வலிஉடைத்து’. (தொ.எழு. நச்.428).

தமிழ்

சாரைப் பாம்பு என்பதில் சிறப்புப் பெயர்முன்னும் பொதுப்பெயர் பின்னும் வந்து ஆகிய என்ற பண்புச் சொல் மறைந்து ஒரே பொருளை உணர்த்துவதால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை என வழங்கப்படுகிறது. அதேபோல் ஆண்டுக் காலம் என்பதில் சிறப்புப்பெயர்முன்னும் பொதுப்பெயர் பின்னும் வந்து ஆகிய என்ற சொல் மறைந்து ஒரேபொருளை உணர்த்துவதால் ஆண்டுக்காலம் என்பதும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை ஆகிறது. எனவே வல்லொற்று மிகுகிறது. ஆறுமுக நாவலரின்"இலக்கணச் சுருக்கம்" நூலின் 354ஆம் விளக்கத்தைப் பார்க்கவும். காலத்தின் சிறப்புப் பிரிவுகள்/பெயர்கள் நூறாண்டு,பத்தாண்டு,ஆண்டு,திங்கள்,கிழமை முதலியன.

இவை எல்லாவற்றுக்கும் பொதுப்பெயர்-காலம். மேலும்,

‘’ஆண்டு என்பது இடப்பொருளைக் குறிக்காமல்’வருடம்’ என்னும் காலப் பொருளை உணர்த்தும் போது, வருமொழி ‘பெயர்ச்சொல்’லாயின் ஒற்று மிகும்; ‘வினைச் சொல்’லாயின் ஒற்று மிகாது. - பேராசிரியர் மருதூர் அரங்கராசன்’’. என்று பேரா. இரெ. குமரன் தெரிவிக்கிறார்.

எனவே ஓராண்டுக்காலம், ஐந்தாண்டுக்காலம் என்பன வல்லொற்று மிக்கு வருதலே பொருந்தும் எனக் கருதுகிறேன்.




**ஓராண்டுக்காலம்:**

*''ஓராண்டு காலம் என்பது மென்றொடர்க் குற்றியலுகரம். அது அல்வழியில் மிகாது'' என்று என் நண்பர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார். ஆனால் தொல்காப்பியரே, ''அல்வழி யெல்லா முறமென மொழிப'' (தொல். எழு. நச்.(368,398) என்று குறிப்பிட்டுள்ளார். சேனாவரையர் எடுத்துக்காட்டாகக், கல்குறிது, கற்குறிது; முள்கடிது, முட்கடிது என்று தெரிவித்துள்ளார். தொல்காப்பிய நூற்பாவிற்கு (414) உரை எழுதிய நச்சினார்க்கினியர், ''அற்புத்தளை என்பது அன்பினாற் செய்த தளையென வேற்றுமையும், அன்பாகிய தளையென அல்வழியுமாம்'' என்று தெளிவுறுத்துகிறார்.*

*நன்னூல் நூற்பாவிற்கு (184) எழுதிய காண்டிகை உரையில், '' அன்பு தளை =அன்புத்தளை, அற்புத்தளை'' என அல்வழியில் விகற்பித்தன'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்கலாம்.*

*எனவே, ஆண்டுக்காலம் என அல்வழியிலும் வல்லொற்று மிகலாம்.*

**இரு பெயரொட்டுப் பண்புத் தொகை**

*''இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாவது, ஆகிய என்னும் பண்புருபு கெட்டு நிற்கப் பொதுப் பெயரோடு சிறப்புப் பெயராயினும், சிறப்புப் பெயரோடு பொதுப் பெயராயினும் ஒருபொருள்மேல் வந்து தொடர்வதாம்....*

*சாரைப் பாம்பு—சிறப்புப் பெயரோடு பொதுப் பெயர்.*

*இது விரியுமிடத்துச் சாரையாகிய பாம்பு என விரியும்.''.........இலக்கணச் சுருக்கம், 354.*

*சாரை என்றால் பாம்பைத்தான் குறிக்கும். நல்ல பாம்பு, பச்சைப்பாம்பு என்பனவற்றில் நல்ல, பச்சை என்பன பாம்பைக் குறிக்குமா? 'ஒரு பொருள்மேல் வந்து தொடர்வது' –கருதுக. சாரை எனில் பாம்பு. பாம்பின் ஒருவகை சாரை. சாரையும் அதுவே; பாம்பும் அதுவே. ஒரே பொருள்.*

**ஆண்டுக் காலம்.**

*தமிழில் சிறுபொழுதினை நேரம் என்பர். ஒரு வினாடி நேரம், ஒரு மணித்துளி நேரம், ஒரு மணி நேரம், பத்து மணி நேரம் என்பர். பெரும்பொழுதைக் காலம் என்றழைப்பர். ஒரு கிழமை(வார) காலம், ஒரு திங்கள் காலம், ஓராண்டுக் காலம், பத்தாண்டுக் காலம்.....என்பர். ஒரு நாள் பொழுது என்பர். அது நேரம், காலம் எனக் குறிக்கப்படாமல் பொதுவான பொழுது என்பதால் குறிக்கப்படும்.*

*ஆண்டு என்பதும் காலம் என்பதும் ஒரு பொருள்மேல் வந்து தொடர்வது. ஆண்டு என்பது சிறப்புப் பெயர். காலம் என்பது பொதுப் பெயர். காலத்தின் ஒரு பகுதி ஆண்டு. ஆண்டு என்றாலும் காலமே. இரண்டும் ஒன்றையே--ஒரு பொருளையே குறிக்கின்றன. விரித்தால் ஆண்டாகிய காலம் எனப்படும். எனவே 'ஆகிய' என்ற சொல் தொக்கி நிற்கிறது. ஆண்டாகிய காலம் என்பது பண்புத் தொகை. இரு பெயர்ச்சொற்களும் ஒருபொருள்மேல் வந்து ஒட்டி நிற்பதால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. சாரைப்பாம்பு என்பதுபோல ஆண்டுக்காலம் என்பதும் இருபெயரொட்டுப் பண்புத் தொகையாகும்.*

# ரிக் வேதம் கூறும் அகத்தியர்

**தேமொழி**
*சான் பிரான்சிஸ்கோ*



*"பொதியில் முனிவன் புரை வரை கீறி*
*மிதுனம் அடைய விரி கதிர் வேனில்*
*எதிர் வரவு மாரி இயைக"*
*[பரிபாடல்: 11 - வையை; நல்லந்துவனார்]*

*'பொதிகை முனிவனின் பெயர்கொண்ட "அகத்தியன்" என்னும் விண்மீன் (star - Canopus) தன் உயர்ந்த இடத்தைக் கடந்து மிதுன ராசியைச் சேர, விரிந்த கதிர்களையுடைய வேனிற்காலம் எதிர்கொள்ளும் கார்காலத்தில் மழை பெய்க.. . ' என்று கூறும் பரிபாடல் வரி, அகத்தியன் என்ற விண்மீனைக் குறிப்பிடுவதாக உரையாசிரியர்கள் விளக்கம் தருகிறார்கள். பொதிகை மலையில் வாழ்ந்தாகக் குறிப்பிடப்படும் அகத்தியனையும், அகத்தியன் என்ற பெயர் கொண்ட விண்மீனையும் இணைத்துக் கூறும் தமிழின் தொல் இலக்கிய நூலான எட்டுத்தொகையின் பரிபாடலில் இடம் பெறும் குறிப்பு இது ஒன்றேயாகும். வடபால் வாழ்ந்த அகத்தியன் என்ற குறுமுனிவர் தென்வானில் விண்மீனாக இலங்குகிறார் என்பது, சிவனாரின் திருமணக் காலத்தில் உயர்ந்த தென்பகுதியைச் சமன் செய்ய அகத்தியன் தென்னகம் அனுப்பப் பட்டார் என்ற ஒரு தொன்மப் புனைவின் பின்னணி கொண்டது. இவ்வரிகள் இடம் பெறும் பரிபாடல் காலத்தால் பிற்பட்டது. வானியல் கணிதத்தின் அடிப்படையில் எல்.டி.சாமிக்கண்ணு இப்பாடலில் குறிப்பிடப்படும் நாள் கி. பி. 634 ஆண்டின் ஆடித்திங்கள் நாள் என்று குறிப்பிடுகிறார். 'பொதியில் முனிவன்' என்பதை 'அகத்தியன்' என்று உரைநூல்கள் விளக்கம் தந்தாலும், அகத்தியன் என்னும் பெயர் தொகை நூல் எதிலும் காணப் படாத ஒரு பெயர்.*

*"அமர முனிவன் அகத்தியன்-தனாது*
*கரகம் கவிழ்த்த காவிரி பாவை"*
*என்றும்;*

*"அமர முனிவன் அகத்தியன்-தான் அது"*
*[மணிமேகலை; சீத்தலைச் சாத்தனார்]*

*என முதன் முதலில் அகத்தியர் என்னும் பெயர் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான மணிமேகலையில்தான் இடம் பெறுகிறது.*

பொதியில் முனிவன் அகத்தியன் என்பதற்கு மாறாக; வீரசோழிய நூலாசிரியராகிய புத்தமித்திரனார்; புத்த சமயத்தவரால் வணங்கப்பெறும் தெய்வமான அவலோகிதர் என்பவர் போதலகிரியில் (பொதிகை மலையில்) தன் மனைவி தாரையுடன் வாழ்ந்தார். அவரிடம் அகத்தியன் தமிழ் பயின்று தமிழுக்கு இலக்கணம் எழுதினார் என்று குறிப்பிடுகிறார்.

"ஆயுங் குணத்தவ லோகிதன் பக்கல் அகத்தியன் கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழ்''

ஆனால், அகத்தியனுக்குத் தமிழ் கற்பித்தவர் சிவபெருமான் என்றும், தமிழ்க் கடவுள் முருகன் என்ற கதைகளும் தமிழரிடம் பரவலாக வழக்கத்தில் உள்ளது.

தொல் சமஸ்கிருத இலக்கியமான ரிக் வேதத்தில் அகத்தியன் குறிப்பிடப்படுகிறார், அவர் வட இந்தியாவிற்கும் தென்னிந்தியாவிற்கும் பண்பாட்டுப் பாலமாக விளங்குகிறார். தமிழும் சமஸ்கிருதமும் சங்கமிக்கும் நிலைக்கு அவர் ஓர் அடையாளக் குறியீடு என்று தமிழர்களாலும் இதுநாள் வரை அகத்தியர் உயர்த்திப் பிடிக்கப்படுகிறார். அறிவியல் வளர்ந்த இக்காலத்தில், அகத்தியன் காவிரி ஆறும், தாமிரவருணி என்னும் பொருநை ஆறும் தமிழ்நாட்டுக்குக் கிடைக்கக் காரணமானவர், கடலையே குடித்தவர் என்ற இயற்கைக்கு முரணான புனைவுகளைப் புறம் தள்ளி விடலாம். அப்புனைவுகள்; அறிவியல் சாயம் பூசப்பட வேண்டியவையோ, அல்லது அவை மறைமுகக் குறியீடுகளா என்ற ஆய்வுகளுக்குக் கூடத் தகுதி பெற்றவையோ அல்ல.

அகத்தியன் என்னும் சித்தயோகி தமிழ் வளர்த்த சான்றோர்களில் முதன்மையானவர்; தமிழ் மொழிக்கு இலக்கணம் கண்டவர்; அகத்தியம் என்ற முதல் இலக்கண நூலின் ஆசிரியர், தமிழ்ச் சங்கத்தில் சிவபெருமானும் முருகப்பெருமானும் புலவர்களாக இலங்க, முதன்மைப் புலவராக இருந்து தமிழாய்ந்தவர்; அவருக்குத் தமிழின் முதல் நூலை யாத்த தொல்காப்பியர் உட்படப் பன்னிரு மாணவர்கள் இருந்தனர் என்று தமிழ் இலக்கியத்தில் கூறப்படும் கருத்துகள் விரிவான ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டியவை. அவ்வாறு ஆராய்வது தமிழ் ஆய்வாளர்களின் கடமையும் கூட. தமிழறிஞர் கா. நமச்சிவாய முதலியார் போன்றோர் ஆய்வு செய்து, நூல் எழுதி, தமிழுக்கும் அகத்தியருக்கும் உள்ள தொடர்புகளாக மேற்கூறப்படும் கருத்துகளைக் குறித்து வினாக்கள் பல எழுப்பி, அவ்வாறாகக் காட்டப்படும் தொடர்புகளை மறுத்தும் உள்ளார்கள் (அகத்தியர் ஆராய்ச்சி, கா. நமச்சிவாய முதலியார், 1931).

தோன்றும்போதே ஞான ஒளியிலிருந்து வெளிப்பட்டதால், 'அகஸ்தி" என்னும் பெயர் சூட்டப்பெற்றாரென்று பெயர்க்காரணம் கூறப்படுகிறது. அகத்தியர் என்ற பெயரில் காலந்தோறும் பலர் வாழ்ந்திருக்கக் கூடும், சங்ககாலத்துத் தமிழ்

வளர்ச்சியில் அகத்தியரின் பங்களிப்பு என்பது ஏற்கக் கூடிய கருத்தல்ல, அவை பிற்காலப் புனைவுகள் என்று கா. நமச்சிவாயனார் சான்றுகளுடன் மறுத்துள்ளார். உயர்வு மானப்பான்மையால் சமஸ்கிருதத்தை உயர்த்திப் பிடிப்போரும்; தாழ்வு மனப்பான்மையும், சமயச் சார்பும் கொண்ட தமிழர், தமிழ் சமஸ்கிருதத்திற்கு இணையானது என்று வலியுறுத்த விரும்பி புனையப்பட்ட கருத்துகள் தமிழின் வரலாறாக மாற்றப்பட்டுள்ளது என்பதை இந்நூல் மூலம் அறிய முடிகிறது. இத்தகைய ஆய்வுகளைத் தமிழ் இலக்கியங்களில் மேற்கொள்ளும் பொழுது, அகத்தியர் குறித்து ரிக் வேதத்தில் காணப்படும் கருத்துகள் குறித்தும் ஆய்வுகள் தேவை. வேதத்தில் அகத்தியருக்கும் தமிழுக்கும் தொடர்பு காட்டப்படுகிறதா? தொல்காப்பியர் (திரணதூமாக்கினி என்று வடமொழி ஆர்வலர்களால் புனைபெயர் கொடுக்கப்பட்டவர்) அகத்தியரின் மாணவர் என்ற குறிப்பு வேதத்தில் உள்ளதா? அகத்தியர் குறித்து வேதம் கூறுவது என்ன? என்ற ஆய்வுகள் ஒப்பாய்வு முறியில் தேவை என்பதை மறுக்க இயலாது.



வேதக் கல்வி அனைவருக்குமானது அல்ல என்ற வழக்கிருந்த முற்காலத்தில் குறிப்பிட்ட ஒருசில சிறுபான்மையினரே அதைக் கற்றனர். அவர்களும் சமயச்சார்புத் தன்மை கொண்டவர்களாக இருந்ததால், வேதத்தில் என்னவெல்லாம் இருக்கிறது என்று கூறப்பட்டப் புனைவுகளை மறுத்து உண்மை என்னவென்று மக்களிடம் கூற அக்கறை அற்றவர்களாக இருந்தார்கள். மாறாக, வேதம் அனைவருக்கும் பொதுவானது என்ற கொள்கை கொண்ட பன்மொழி அறிஞர் ம.ரா.ஜம்புநாதன் (மணக்கால் ராமசாமி ஜம்புநாதன், 1896-1974) ரிக் வேதத்தை 30 ஆண்டுகளுக்கும் மேலாக ஆய்வு செய்து தமிழில் மொழிபெயர்த்தார். அவர் மறைவிற்குப் பின்னர், அவர் மொழிபெயர்த்த ரிக்வேதம் இரு தொகுதிகளாக (தொகுதி 1- 1978; தொகுதி 2- 1980) வெளியானது. இணையச் சேகரிப்பில் இந்நூல்களைப் படிக்கலாம் *(Volume -1: https://archive.org/details/1-1-6_20210721 & Volume -2: https://archive.org/details/2-7-10).* ரிக் வேதம் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டப் பதிப்பாக 19ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே உள்ளது *(Rig Veda [translation and commentary] by H. H. Wilson,1866).*

**ரிக் வேதம் கூறும் அகத்தியர்**

*ரிக்வேதம்-தொகுப்பின் (சம்ஹிதை) 10 மண்டலங்களும், தேவர்களைத் துதிக்கும் சுமார் 10552 'ரிக்' மந்திரங்களைக் கொண்டவை. இந்த மந்திரங்கள் 'சூக்தங்கள்' என்று 1028 பிரிவுகளாகத் தொகுக்கப்பட்டவை. ரிக்வேதத்தின் முதலாம் மண்டலத்தில் 165 முதல் 191வரை உள்ள 27 சூக்தங்கள் அகத்தியரால் எழுதப்பட்ட 'அகஸ்திய சூக்தங்கள்' ஆகும். இவை பெரும்பாலும் இந்திரன், மருத்துக்கள், அசுவினிகள் ஆகியவர்களைப் போற்றுபவை. இவர்களைத் தவிர்த்து அக்கினி, ஆப்பிரி, சூரியன், பிரகஸ்பதி, விசுவே தேவர்கள் போன்றவர்களும் போற்றப்படுகிறார்கள்.*

*அகஸ்திய சூக்தங்களில்; கடவுளருக்கு சோமரசம் பிழிந்து கொடுத்து, யக்ஞம் செய்து அவி கொடுக்கப்படுகிறது. இந்திரனிடம் எங்களுடைய பகைவர்களை அழித்து, அவர்களுடைய செல்வத்தை எங்களுக்களிக்கவும், நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைய உதவுங்கள் என்று வேண்டுபவையாக அமைந்துள்ளன. மருத்துக்கள், அசுவினிகள், அக்னி போன்ற பிற கடவுளர்களும் தங்கள் குதிரைகள் பூட்டிய தேர்களுடன் சென்று, வஜ்ராயுதம் கொண்டு பகைவரை அழிக்கும் வீரனான இந்திரனுடன் நட்பிலிருந்து, அவன் போரில் பகைவர்களை அழிக்க உதவி செய்யுமாறு வேண்டப்பட்டு அவி அளிக்கப்படுகிறார்கள். உணவும், பலமும், நீண்ட ஆயுளும் தேவை என்று மீண்டும் மீண்டும் வேண்டப்படுகிறது. எதிரிகளின் கோட்டையை அழித்து தங்களுக்குச் சுகம், செல்வம் ஆகியவற்றைத் தருமாறும் வேண்டப்படுகிறது.*

*அகஸ்திய சூக்தங்களில்; 179 ஆவது சூக்தத்தில் அகத்தியரின் மனைவியான உலோபாமுத்திரை என்பவள் பற்றிய குறிப்பு வருகிறது. ஒரு மாணவன் பற்றிய குறிப்பு ஒன்றும் வருகிறது. அதனால் ரிக்வேத விளக்கம் எழுதியோர் அகஸ்தியர் ஒரு வேதப் பள்ளிக்கூடம் நடத்தியிருக்கலாம் என்று கருதுகிறார்கள். மனைவியிடமும், அவளின் இல்லற நாட்டம் குறித்தும் அக்கறை அற்றவராக இருக்கிறார் அகஸ்தியர். அவரிடம் அவள் நான் பல ஆண்டுகளாக அல்லும் பகலும் உங்கள் தேவை அறிந்து பணிவிடை செய்து வந்திருக்கிறேன், அதனால் களைத்துவிட்டேன். இப்பொழுது முதுமை நெருங்குவதால் என் அழகு பொலிவிழக்கிறது. ஆதலால், கணவர் தன் மனைவியோடும், மனைவி தன் கணவரோடும் இணையலாம் என்று அகஸ்தியரை அழைக்கிறாள். அகஸ்தியரும் நாம் நம்முடைய விருப்பங்களையெல்லாம் அனுபவிப்போம். நாம் இருவரும் இணைந்து இயங்கினால் வெற்றி அடையலாம். எனக்கும் காமம் தோன்றுகிறது. உலோபாமுத்திரையே என்னிடம் வருக, என்று அழைத்து அவளுடன் உறவு கொள்கிறார்.*

*அப்பொழுது அங்கிருந்த அகஸ்தியரின் மாணவன், இவர்கள் செயல்பாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்தவன், உண்மையாகவே மனிதன் பல காமங்களின் வசத்தில் இருக்கிறான் என்று சொல்லிக் கொள்கிறான். அகஸ்தியன் தனக்கு மக்கட் செல்வங்கள் விரும்பி மனையுடன் இணைகிறான் (உழுபடைகளால் உழுது, விதைத்து, விளைவித்து என்று பாடலில் அது குறிப்பிடப்படுகிறது), அதன் விளைவாக இரண்டு வர்ணங்களைப் பெறுகிறான். (மக்கட் செல்வத்தை? அடைந்தான் எனக் கொள்ளலாம்). அசுவினிகள் மீது பாடப்படும் 184ஆவது சூக்தத்தின் 6ஆம் மந்திரத்தில் அகஸ்தியருக்கு மக்கட்பேறு வரம் அளிக்குமாறு வேண்டப்படுகிறது. சூரியன் மீது பாடப்படும் 191ஆவது சூக்தத்தில் அகஸ்தியரை கொட்டிய தேளினால் உடலில் ஏறிய நஞ்சை நீக்குமாறு வேண்டப்படுகிறது.*



*மனிதர்களின் தலைவர்களில் தலைவனானவன் அகஸ்தியன் (இவ்வாறாக அகஸ்தியனே தன்னைக் குறித்துக் கூறிக்கொள்வது). இந்த அகஸ்திய சூக்தங்கள் பகுதி தவிர்த்து, ரிக்வேதத்தின் மேலும் பிற பகுதிகளிலும் அகஸ்தியர் பற்றிய குறிப்புகள் உள்ளன. அகஸ்தியரின் தாய் அஸமாதி என்பவர். மித்திரா வருணர்களின் புதல்வன் அகஸ்தியர். அகத்தியனும் வசிட்டனும் ஒரே விதமாகப் பிறந்த உடன் பிறப்புகள். மித்திரா, வருணர்கள் ஆகியோர் அவர்களின் ரேதஸை கும்பத்தினுள் பொழிந்தார்கள். அக்கும்பத்திலிருந்து 'மானன்' என்னும் அகஸ்தியனும் வசிட்டனும் தோன்றுகிறார்கள். அகஸ்தியன் குறித்து ரிக் வேதத்தில் கிடைக்கும் அதிகம் பேசப்படாத மற்ற தகவல்கள்; அகஸ்தியனின்*

புதல்வன் திருளஹச்யுதன், அகஸ்தியனின் பேரன் இத்மவாஹன் (திருளஹச்யுதனுடைய புதல்வன்). அகஸ்தியருடைய சகோதரியும் அவளுக்குப் புதல்வர்களும் இருப்பதாகவும் குறிப்பு உள்ளது.

அகஸ்தியன் குறித்து ரிக் வேதத்தில் இவ்வளவு குறிப்புகள் இருப்பினும், தமிழகத்தில் புழக்கத்தில் இருக்கும் தொல்காப்பியக் கதைகள் பற்றிய குறிப்புகள் தென்படவில்லை. அகஸ்தியரின் மாணவர் என்று கூறப்படும் திரணதூமாக்கினி என்ற தொல்காப்பியர் பெயர் மட்டுமல்ல; அதங்கோட்டாசான், பனம்பாரன், காக்கைபாடினியார் என்று அகஸ்தியரின் மாணவர்களாகக் கூறப்படுபவர் எவர் பெயரும் ரிக் வேதத்து அகஸ்தியர் பற்றிய குறிப்புகளில் காணப்படவில்லை. மற்ற மாணவர்கள் பற்றியோ, அவர்களின் எண்ணிக்கை பற்றியோ, அவர்கள் யாவரும் அகஸ்தியரிடம் தமிழ் பயின்று இலக்கண இலக்கியங்கள் எழுதியதாகவோ எந்த ஒரு குறிப்பும் இல்லை. தமிழுக்கும் அகஸ்தியருக்கும் தொடர்பு காட்டப்படவில்லை. முருகனுக்கும் சிவனுக்கும் அகஸ்தியருக்கும் தொடர்பு காட்டப்படவில்லை.

ரிக்வேத அகஸ்திய முனிவர் என்பர், சப்த ரிஷி எனப்படும் ஏழு முனிவர்களுள் (விசுவாமித்திரர், ஜமதக்னி, கௌதமர், வசிட்டர், காசியபர், பாரத்துவாசர், அத்திரி) ஒருவர் அல்லர். ஆனால் அவ்வாறு தொடர்ந்து எழுவரில் ஒருவர் என்று மக்கள் பிழையாகக் கூறி வருகிறார்கள். வானத்து விண்மீன் கூட்டத்திலும் சப்த ரிஷி மண்டலமும், அகஸ்திய விண்மீனும் வெவ்வேறு இடங்களில் இருப்பவைதான் என்பது குறிப்பிடத்தக்கது.

அவர் தென்னகம் வந்து உலகைச் சமப்படுத்தியது, விந்திய மலையை அடக்கியது, பொதிகையில் வாழ்ந்தது, ராமருக்குப் போர் கருவிகள் அளித்தது, இராவணனை இசையில் வென்றது, அவரது இசைப்புலமை, அகத்தியர் தமிழ்நாட்டுக்குக் காவிரி, தாமிரபரணி என்ற பொருநை ஆறுகளை அளித்தது போன்ற பரவலாகப் பேசப்படும் புராணக் குறிப்புகள் எதுவும் இல்லை. இவை யாவும் நான்காம் அல்லது ஐந்தாம் நூற்றாண்டுகளில் உருவாக்கப் பட்டு தமிழ் மண்ணில் நுழைந்திருக்கக் கூடும்.

புராணக் கதைகளின் தேவை, அவற்றின் தோற்றம், ரிக் வேதக் கடவுளர் வழிபாடு கைவிடப்பட்டது, அல்லது கடவுளரின் தகுதி நீக்கப்படுவது போன்ற வற்றின் சமூகப் பின்னணி விரிவான ஆராய்ச்சிக்குரியது. இதனால், காலத்தால் முற்பட்ட சங்கப் பாடல்களில் இடம் பெறாதவரும், பண்டைய தமிழ் மக்கள் அறிந்திருந்திராத அகஸ்தியர் தொல்காப்பியருக்கும் ஆசிரியர், அவர் தலைமை வகித்த சங்கங்களின் தோற்றம் என்பவை எல்லாம் எப்படிப்பட்ட புனைவு என்பதைத் தரவுகளின் அடிப்படையில் எவரும் முடிவு செய்யலாம்.

# செம்புலப் பெயல் நீர் - செம்புலம் என்பது எது?

**பேராசிரியர் முனைவர் மு. முத்துவேலு**
*முதல் பதிவாளர்*
*செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்*
*சென்னை*



*சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகை நூல்களை வரிசைப்படுத்தும் பாடல் குறுந்தகையை" நல்ல குறுந்தொகை" என்று குறிப்பிடுகிறது..*

*நல்ல என்னும் அடைமொழிக்கு ஏற்ப குறுந்தொகையில் காணப்படும் ஒவ்வொரு பாடலும் இனிக்கும் பலாச்சுவையாய் இருப்பதைக் கற்றோர் அறிவர்.இதில் உள்ள பாடல்களில் சிலவற்றிற்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அந்தப் பாடல்களுக்கு அந்தப் பாடலில் அமைந்துள்ள அழகிய ஒரு தொடரைஅல்லது அரிய உவமையை வைத்து அந்தப் பாடலின் ஆசிரியர் பெயரை உருவாக்கி இருக்கிறார்கள்.*

*அந்த வகையில் உருவான பெயர் தான் செம்புலப் பெயல் நீரர் என்னும் பெயராகும்.*

*குறுந்தொகையில் அமைந்த இந்த பாடலில் செம்புலப் பெயல்நீர் போல என்ற உவமைத்தொடர் அமைந்துள்ளது.*

*யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி அறிதும்*
*செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே*
*குறுந்தொகை பாடல் எண் 40*

*தமிழரின் அகத்திணை மரபில் ஓர் ஆணும் பெண்ணும் எதிரெதிரே சந்தித்து உள்ளம் கலந்து தமக்குள் காதல் வயப்பட்டு இருவரும் இன்பம் துய்க்கின்றனர் என்பது கவிதை மரபாகும். இவ்வகையில் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவன் ஒருவன் தன் தலைவியை நோக்கி பாடிய பாடல்தான் இப்பாடல்.*

முன்பின் தெரியாத ஒரா ஆணிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்த தலைவியின் காதல் காலத்தால் அழியாது என்ற நம்பிக்கையை ஊட்டுவதற்காகத் தலைவன் பாடிய தண்டமிழ்ப் பாடலே இப்பாடலாகும்.

இப்பாடலில் தன் தாயும் தன் தலைவியின் தாயும் இதற்கு முன்பு ஒருவரை ஒருவர் அறிந்ததில்லை,; ஒருவருக்கு ஒருவர் உறவும் இல்லை; தன்னுடைய தந்தையும் தலைவியின் தந்தையும் எந்த முறையிலும் உறவினர்கள் இல்லை. தானும் தலைவியும் எவ்வகை உறவு முறையிலும் வரவில்லை; ஒருவரை ஒருவர் அறிந்தவர் இல்லை.ஆனால் இப்பொழுது செம்புலத்தில் விழுந்த மழை நீரைப் போல இருவரது அன்பு நிறைந்த உள்ளமும் ஒன்றாகக் கலந்து பிரிக்க முடியாத அளவுக்கு இணைந்து விட்டது என்று கூறுகின்றான்.



அன்புடை நெஞ்சம் இரண்டும் கலந்த அந்தப் பிரிக்க முடியாத கலப்பிற்குச் சொல்லப்பட்ட இந்தச் செம்புல பெயல்நீர் போல என்ற உவமை ஆழ்ந்த பொருள் உடையது.

செம்மண் சிவந்த நிறம் உடையது; மழை நீரோ வண்ணம் இல்லாதது. இரண்டும் கலக்கிற பொழுது சிவந்த நிற மண்ணானது தன்னுடைய நிறத்தை இழந்து வெளிறிய சிவப்பு நிறத்தைப் பெறுகிறது. இது இரண்டுக்கும் இடையே வண்ணத்தில் ஏற்படும் கலப்பாகும்.

மண் என்பது திடப்பொருளாகவும் மழை நீர் என்பது திரவப் பொருளாகவும் உள்ளது. இவை இரண்டும் கலந்த பின்பு திடப்பொருளாகவும் இல்லாமல்




திரவப் பொருளாகவும் இல்லாமல் இரண்டுக்கும் இடைப்பட்ட கூழ்நிலைப் பொருளாக மாறிவிடுகிறது. இது வடிவத்தில் ஏற்படும் மாற்றம் ஆகும் எனவே இருவரும் தத்தம் நிலையிலிருந்து நீங்கி ஒரு புதிய நிலையை அடைவது தான் காதலின் கனிந்த நிலையாகும். அதைப்போல சிவந்தி நிறம் வண்ணத்தை இழப்பதும் நிறமில்லாத நீர் வண்ணத்தைப் பெறுவதும் என்ற இந்த உவமை ஒருவருக்கொருவர் இழந்தும் ஈட்டியும் வாழ்வதுதான் காதல் வாழ்க்கையின் அடிப்படை என்பதைச் சுட்டுவதற்காகவே இந்த அழகிய உண்மை எடுத்தாளப்பட்டுள்ளது.

செம்புலம் என்பதற்கு வேறுபொருளும் கூறுவர். ஒரு குறிப்பிட்ட நீள அகல ஆழத்தில் நிலத்தைத் தோண்டி தோண்டப்பட்ட நிலத்திலிருந்து எடுக்கப்பட்ட மண்ணை வெளியில் குவித்து விட்டு மீண்டும் அந்த மண்ணை தோட்டப்பட்ட குழியில் இட்டு நிரப்ப வேணாடும்.பொழுது மண் மீதம் ஏதுமின்றி குழி நிரம்புமானால் அதுவே செம்புலமாகும். அவ்வாறில்லாமல் தோண்டப்பட்ட குழியில் இருந்து எடுக்கப்பட்ட மண்ணை மீண்டும் போடும் பொழுது அந்தக் குழி நிறையாமல் மண் போதவில்லை என்றால் அது வன்புலமாகும். அவ்வாறில்லாமல் தோண்டப்பட்ட மண்ணை மீண்டும் போட்ட பொழுது குழிநிறைந்த பின்பும் மண் எஞ்சி விடுமானால் அந்த இடம் மென்புலமாகும். வன்புலமாகவும் இல்லாமல் மண்ணும் குழியும் ஒன்றாக இருக்கின்ற செம்புலத்தில் விழுந்த நீரானது எவ்வாறு சிறப்புற்று அமையுமோ அதைப் போல தலைவனும் தலைவியும் உள்ளத்தில் செம்மையோடு கலந்திருப்பர் என்று இதற்குப் பொருள் சுட்டுவாரும் உளர்.

செம்புலம் என்பதற்கு செம்மையான புலம் என்று பொருள் கொண்டு அத்தகைய செம்மையான நிலம் என்பதற்கு இத்தகைய வரையறையைக் கூறி மகிழ்வார் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள்.

செம்புலம் என்பதற்குப் பாலை நிலம் என்றும்பொருள் கூறுவார்கள். பாலை நிலத்தில் விழுந்த நீரானது வெப்பத்தால் நிலத்துடன் அடுத்த நொடியே ஒன்றி

விடுவதைப் போல  தலைவன் தலைவியின் உள்ளங்கள் இரண்டும் விரைவாக ஒன்றிணைந்து விடுகின்ற தன்மையை குறிக்கும் இந்த வகையில் ஒரே கூறுகிறார் பேராசிரியர் மு அருணாச்சலம் அவர்கள்..

செம்புலம் என்பதற்கு மேட்டு நிலம் என்று ஒரு பொருளும் உண்டு. ஒரு உயரமான இடத்தில் விழுகிற மழை நீரானது விழுந்தவுடன் அது சிதறி நான்கு ஐந்து கிளைகளாகப் பிரிந்து அங்கிருந்து கீழே பள்ளத்தில் விழும்.மேட்டு நிலத்தில் விழுந்து அருவியாகப் பிரிந்த நீரானது பள்ளத்தில் வந்து விழுகிற பொழுது அந்த நீர் அனைத்தும் ஒன்றாக கலந்து விடும். இப்போது கலந்துவிட்ட அந்த நீரில் எந்த பிரிவில் இருந்து வந்த நீர் என்பதைப் பிரித்துக் காண இயலாது. தலைவன் தலைவி இருவரது உள்ளமும் வேறு வேராக இருந்தாலும் அவை கலந்த பின்பு ஒருவரோடு ஒருவர் உள்ளத்தால் கலந்து விட்ட அந்தப் பிணைப்பினை உணர்த்துவதற்கு இந்த உவமை பயன்படுத்தப்பட்டுள்ளது. தலைவனும் தலைவியும் தம்முள் கலந்த பின்பு எவரது உள்ளம் எதுவென்று காண முடியாத அளவுக்கு இருவரும் உள்ளத்தால் இணைந்து விட்டனர் என்பதை உணர்த்துவதற்கான உயர்ந்த உவமையாக இது. ஆளப்பட்டுள்ளது,என்றும் பொருள் கூறுகிறார்கள். இந்தக் கருத்தானது பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் அவர்கள் கூறுகிற கருத்தாகும்.

நெஞ்சங்கள் கலந்து விட்டு அங்கே உவகை பூத்து நிற்கிற நிகழ்விற்குச் சொல்லப்பட்ட செம்புலப் பெயல்நீர் போல என்னும் சிறந்த உவமைக்கு அறிஞர் பெருமக்கள் தமது நோக்கில் அரிய பொருளைத் தந்துள்ளார்கள்.இந்த நான்கு வகை விளக்கமும் நற்றமிழில் சிறந்து விளங்கக் காண்கிறோம்.

அறிஞர்களுக்கு ஓர் உவமை உயர்ந்ததென்று புலப்பட்டு விட்டால் அதிலே தோய்ந்து அதற்குப் புதுப்புது விளக்கங்களைச் சொல்வதற்கு முற்படுவார்கள் என்பதற்கு இந்த உவமை ஓர் எடுத்துக்காட்டாகும். உலகெங்கிலும் இருக்கிற காதலர்களின் இன்றைய உளப்பாங்கிற்கு எடுத்துக்காட்டாக அமைவது இந்தப் பாடல். இது உலகக் காதலர்களின் உள்ளப் பிணைப்பை உயர்த்திப் பிடிக்கின்ற உவமையாக இருப்பதை மறுப்பதற்கு இல்லை.

சங்கத் தமிழ் காதல் கவிதைகளை அமெரிக்க நாடுகளில் பரப்பிய பெருமை ஆங்கில பேராசிரியர் ஏ கே ராமானுஜம் அவர்களைச் சாரும். அவரது சங்கத்தமிழ் மொழிபெயர்ப்புகளில் மிகவும் குறிப்பிடத்தக்கது. இந்த பாடல். இந்தப் பாடல் அவரது மொழிபெயர்ப்பு வழியே அமெரிக்க ஊடகங்களின் வழியாக 50 ஆண்டுகளுக்கு முன்பே புகழ்பெற்றது.இந்தப் பாடல் வழியே சங்கத்தமிழரின் காதல் சிறப்பினை உலகம் உணர்ந்து கொண்டது என்றால் அது மிகையில்லை..

# எளிய முறையில் யாப்பறிவோம்

**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**
பொருளாளர்,
பெங்களூரு தமிழ்ச் சங்கம்.



***பாடம் :28***

*கலி மண்டிலம் + சந்தக் கலிமண்டிலம், கலிமண்டில மண்டிலம், வஞ்சி மண்டிலம்.*

*"அளவடி நான்கின கலிவிருத் தம்மே!" என்று யாப்பருங்கலம் செப்புதல் போல, அடிதோறும் நான்கு நான்கு சீர்கள் கொண்டு, நான்கு அடிகளால் ஒரெதுகைப் பெற்று வருதல் கலிமண்டிலம் ஆகும். இக்கலி மண்டிலம் அளவடியாய் வந்து, முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் பொழிப்பு மோனை அமைதல் வேண்டும். அடி தோறும் பதினோரு எழுத்து அல்லது பன்னிரண்டு எழுத்து வரும் என்றும், அதற்கு மேலும் எழுத்துகள் வரும் என்றும் இலக்கண ஆசிரியர் உரைக்கின்றனர். சில என்னுடைய எடுத்துக் காட்டுப் பாடல்களைக் காண்போம்.*

***பன்னிரெண்டு எழுத்து வரும் ஒரு வகைக் கலி மண்டிலப் பாடல் கீழே:***

*உலையின் சீர்மொழி நீர்கொதி தானது;*
*மலையின் நன்மொழி மாமலை நீரது!*
*அலையின் நீர்மொழி ஆழ்கடல் ஓசையே!*
*நிலைத்த பார்மொழி நீள்தமிழ் தானிது!*

*(நெருப்பலையார்)*

***பதினோரு எழுத்து வரும் வேறு ஒரு வகைக் கலி மண்டிலப் பாடல் கீழே:***

*நண்டை விட்டிட நாட்டிய மாடிடும்?*
*வண்டு வந்துதான் வாழ்த்தினைக் கூறிடும்?*
*கொண்டல் சூரியன் போலொளி வீசிடும்?*
*மண்டி போடுவோர் மாமற வர்புகல்?*

*(நெருப்பலையார்)*

*மேலேயுள்ள பாடல்கள், மா, விளம், விளம், விளம் என்னும் வாய்பாட்டால் அமைந்த ஒரு வகைக் கலி மண்டிலங்களாகும். அடுத்து,*

*பன்னிரண்டு எழுத்தால் அமைந்த, கூவிளம் சீர்களால் வந்த என்னுடைய வேறு ஒரு வகைக் கலி மண்டிலம் கீழே காண்போம்.*

***முழுக்கக் கூவிளம் சீர் வந்த பிறிதொரு வகைக் கலி மண்டிலப் பாடல் கீழே:***

*நாலடி ஈரடி நற்றமிழ் நூலடி*
*காலடிப் பாங்குடன் காற்றென நின்றன*
*ஆலடி போலவே ஆற்றலாய் நீண்டன;*
*வேலடி வேந்தனாய் வேட்கையைக் கொள்கவே!*

*(நெருப்பலையார்)*

*மேலே பன்னிரண்டு எழுத்துகளுக்கு மேலும் வரும் என்று சுட்டியுள்ளதற்கிணங்க, பதினாறு எழுத்துகள் வந்த கருவிளம் சீராய் வந்த என்னுடைய பாடலொன்றைக் கீழே காண்போம்.*

***கருவிளம் சீர் கொண்ட மற்றொரு வகைக் கலி மண்டிலப் பாடல்:***

*நிறத்தினை வழங்கிடும் நிறம்பல தழுவிடும்*
*மறமிலா உயிரென மகிழ்ந்துமே உயிர்த்திடும்*
*அறமிலா எவருமே அழிவதே அறமென*
*புறப்பொருள் உரைத்திட பொசுங்குதல் நலமிதே!*

*(நெருப்பலையார்)*

*தொடர்ந்து, விளம், விளம்,மா, விளம் என்னும் வாய்பாட்டில் பதிமூன்று எழுத்துகளால் அமைந்த கலிமண்டிலப் பாடலொன்றைக் கீழே காண்போம்.*

***பதிமூன்று எழுத்தமைந்த கலி மண்டிலப் பாடல் கீழே:***

*எண்ணிலும் எழுத்திலும் இனிதாய் வாழ்ந்திடும்*
*மண்ணிலே நிலைத்ததோர் மனம்வாழ் நற்றமிழ்*
*கண்ணிலே ஒளிர்ந்திடும் கனிந்த பார்வையாய்*
*விண்ணிலும் நிலைத்திடும் வியப்பைக் கொண்டவள்!*

*(நெருப்பலையார்)*

*இனி சந்தக் கலி மண்டிலம் அறிவோம். இந்தச் சந்தக் கலி மண்டிலமானது இனிமையான ஓசை நயத்துடன் கேட்போரைக் கவரும் சந்த ஓசை அமைந்ததாகும். இப் பாட்டில் " கனி, கனி,கனி, மா" என்னும் வாய்பாட்டில் அமைந்ததாகும். கனிச்சீர் கொண்ட வாய்பாடாக இருப்பினும் கனிச்சீர்களான நான்கு வாய்பாட்டில் இனிய ஓசை வேண்டுமெனில் கூவிளங்கனி, கருவிளங்கனி என்ற இந்த இரண்டு விளங்கனிகளைத் தவிர்த்து, தேமாங்கனி, புளிமாங்கனி சீர்களைப் பயன்படுத்த வேண்டும். இதில் காய்ச்சீரும் ஒன்றிரண்டு*

விரவி வரும். இதில் எழுத்தெண்ணிப் பாடத் தேவையில்லை. தளையும் பார்க்கத் தேவையில்லை. நான்கு அடிகள் கொண்டு நான்கடிகளும் ஓரெதுகைப் பெற்று, முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனைப் பெற்று வரும். இனி கீழே என்னுடைய பாட்டைப் பார்ப்போம்.

**சந்தக் கலி மண்டிலப் பாடல் கீழே:**

*கல்வித்தனை கற்றும்பல கருத்தும்சில உரைப்பான்;*
*எல்லாம்அவன் செயலேஎன எல்லாம்இவன் செய்வான்;*
*கொல்லும்கொலைக் கருவியெனக் கொன்றேநலன் கெடுப்பான்;*
*நல்லோன்என நடித்தேசிறு நல்லொழுக்கம் கொள்ளான்!*
*(நெருப்பலையார்)*

அடுத்து இப்பொழுது, கலி மண்டில மண்டிலம் என்ற பாடல், அறிமறியாய் வழங்கப்படும். அதாவது அடியை கீழே மேலே என மாற்றி மாற்றி வாசித்தாலும் பொருள் மாறாமல் இருக்கும். இதற்கு அடிமறி மண்டல மண்டிலம் எனப்படும். ஒவ்வொரு அடியும் அந்த அடியிலேயே முடிவுறும். எப்படி மாற்றினாலும் எதுகை மாறா வகையில் பாட்டை அமைக்க வேண்டும். பெரும்பாலும் அடிதோறும் ஓரெதுகையே வரும். நான்கடி பாடலாகும். ஈற்றுச் சீர் சந்த ஓசை அமைந்து வரும். இனி என்னுடைய பாட்டைக் காண்போம்.

**கலி மண்டில மண்டிலப் பாடல் கீழே:**

*மண்ணுயிர்க்கோ இயற்கையாவும் மண்ணகத்தில் தாய்தந்தை;*
*மண்ணுழவர் நெல்வயலின் மாண்புடைய தாய்தந்தை;*
*எண்ணெழுத்தே இலக்கியத்தின் ஏற்றமிகு தாய்தந்தை;*
*கண்ணுக்குப் பார்வையீயும் கருமணியே தாய்தந்தை!*
*(நெருப்பலையார்)*

கலி மண்டிலம் சார்ந்த விளக்கமும் சிறிது அறிய முயல்வோம். அதாவது கழிநெடிலடியில் வருகின்ற காய்ச் சீர்கள் மட்டும் அடிதோறும் சீர் தோறும் வந்தால் அது வேறொரு வகை கலி மண்டிலம் ஆகும்.

அரையடி தோறும் இரண்டு காய்கள் தொடர்ந்து நான்கு அடிகளாக, அடிதோறும் ஓரெதுகையைக் கொண்டு, முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை அமைந்து வருவதாகும். வரிகளில் அறுசீர், எண்சீர் மண்டிலம் போல் இரண்டு காய்ச் சீர் கொண்ட ஒருவரி வரும்.

அடுத்த இரண்டு காய்ச் சீர் அடுத்த வரியில் மடக்கி உள்ளே தள்ளி எழுதுதல் வேண்டும். இப்படியே பாட்டு முழுக்க நடைபயிலும். என்னுடைய எடுத்துக் காட்டுப் பாட்டைக் காண்போம்.

**காய்ச்சீர்களாக வந்த வேறு வகைக் கலி மண்டிலப் பாடல் கீழே:**

*குறள்கற்போம்! குறள்கற்போம்!*
*குற்றமற்ற வாழ்வுவாழ*
*குறள்படியே நடந்திடவும்*
*குவலயத்தை வென்றிடவும்*
*குறள்கற்போம்! குறள்கற்போம்!*
*குறள்கருத்தைப் போற்றிடுவோம்!*
*அறம்கற்போம்! அறவழியில்*
*அன்றாடம் நடந்திடுவோம்!"*

*(நெருப்பலையார்)*

இனி, வஞ்சி மண்டிலம் அறிவோம். இந்த வஞ்சி மண்டிலம் முச்சீரால் நான்கடியில் அமைவதால் வஞ்சி மண்டிலம் ஆயிற்று. என்னுடைய எடுத்துக் காட்டுப் பாடலைக் காண்போம்.

**மா+ மா+ கனி சீரமைந்த வஞ்சி மண்டிலப் பாடல் கீழே:**

*அருவி ஞானம் நீராகுமே!*
*அருகா ஊற்றின் மலையாகுமே;*
*பருகும் கடலும் பாங்காகுமே;*
*உருகா நெஞ்சம் சருகாகுமே!*

*(நெருப்பலையார்)*

மேலேயுள்ள பாடல் அடி தோறும் எல்லாச் சீர்களும் ஈரசைச் சீர்களாக வந்து, ஒவ்வோரடியிலும் ஈற்றுச் சீர் மூவசைச் சீராக காய்ச் சீர் வந்த வஞ்சி மண்டிலமாகும். இறுதியாக, மா, விளம், விளம் என்னும் வாய்பாட்டால் வந்த என்னுடைய வேறொரு வஞ்சி மண்டிலப் பாடலைக் கீழே காண்போம்.

**மா, விளம், விளம் என்று வந்த வேறொரு வஞ்சி மண்டிலம்:**

*கற்றே அறிந்திடு கல்வியை;*
*பற்றும் வைத்திடு பாங்குடன்;*
*அற்றே நின்றிடு தனக்கென;*
*கற்றே தெளிவாய் அறத்தினை!*

*(நெருப்பலையார்)*

அடுத்த பாடத்தில் செய்யுள் வகைகளான ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவற்றில் அடங்காத சில இசைப் பாடல்களான தனிப்பாடல்கள் பற்றி அறிவோம்.

# Gene Notes in Vengai Anchor – II

**Dr. C. Rajeswari M.A., M.Phil., Ph.D**
Tamilnadu State awardee for best translation



A mammoth wave knocked at him. It didn't grant him a few seconds to breathe the ocean air. The water looked dark. A wall of water, cold and hard, dashed at him.

The outrage at the salty water was violent and rude.

He realized the thud of the water thrashed on him and tossed him away like a car in the air. A car was floating in front of him. This might have created a picture in his mind as he was hit by a car. But the car was like a palm leaf floating in the river. Rushing and roaring tall waves rolled that car twice and finally dashed it against the wall. Blocked by the wall, the car stood like a ship on the shores. The angry waters flung him away on the top of the car. His head knocked against the car with a thud. He couldn't know whether his heart was beating or not. His body was paralyzed, and he looked like a corpse on the top of the car. For every roaring wave, the car was dashing against the wall. Sometimes the car was about to overturn... Next moment he seemed to be fixed under the car, but it didn't happen.

In another hour, the waves retreated. The speed of the alarming waves reduced. As the waters pinged back, the car gradually slipped and dashed firm against that wall. Otherwise, it could have been pulled into the sea. Dev was the only person found on that seashore.

The next morning, Shao Shen came to the shores. Both the officer and the cop wanted him to be alive, and they believed in it. They found Dev lying on the car and they immediately took him to the hospital. He was breathing, but there was no other sign of his life. His head drooped and hang. He didn't murmur any word or sound and the body was icy cold. Still, the officer wished to get him back active, so he took immense care of him. He used his power to get him back.

Dev was in intensive treatment the whole day. He slightly shrieked after two consecutive electric shocks. Now the doctor's face expressed a ray of hope and smiled at the police officer. His eyes were widely opened.

Dev did not regain consciousness the next day too. He had a peculiar dream, but he didn't take it seriously. He felt that he has many names. Once he said he is Saravanan, the next time he uttered Rajendran, and another time Murugu. He was confused with many images of himself. In his mind, he had an experience of the sea, royal attire, hills and rivers, long travel, and different climates with rain, hot sun, and storm. He suffered acute pain in his head. He could not bring back anything in order. He had a throbbing pain in his head and could not glue his eyes together.



தமிழ்மகன்,
எழுத்தாளர், பதிப்பாளர்.

A pain pierced into his brain. It was like a pin pricking into his brain. Although he knew the brain cannot experience any pain, he had no way to understand that. Slowly, he tried to open his eyes. When he opened half, he could not, so he closed it again, and he felt drowsy.

Somebody told him, 'Don't worry, you are alright'. Maybe it is the doctor. But he could not recognize his face. It gets mixed up with many faces. It looked like a dream. Before he could make it believe as the real one, he felt he is standing on a seashore. One British man approached him with a big cigar on his lips and asked him 'fire please'.

One old lady was writing something. A young girl was crying 'peacock, peacock.' A group of young men is running with a cock hugged close to the chest. Many are fleeing away amidst the shooting sounds of the guns. His head aches. The doctor says, 'Please open your eyes; Let me see'; but he couldn't. It is a huge door made of teakwood. A few Jains stood up and say 'The alphabet should be in this form. Bali–Prakrit–Samaskrth–Dhignagar had already told'. The doctor came closer to his ears and said 'Relax'. That police officer's face is familiar. Dev could not open his eyes. He felt drowsy. He fell asleep and unconscious.

Dev seemed to be alright. His mother Jessiya got his address from the Korean office and came to meet him. She is 54, but looked ten years younger. The doctor mistook her for the hospital staff and asked her, 'Sister, you told me Dev's mother had come. Where is she?' Jessiya was very much pleased despite her son's illness. She is a Malay lady and her husband Anthanan worked in a Tamil daily, in Malaysia. They fell in love and got married. They moved to India when the current chief minister performed meditation in

front of the tomb of the former chief minister. On knowing this, Anthanan thought of returning to the same plane, but very soon he got used to Tamil Nadu politics. At that time, Dev was ten years old. He stayed in Korea, China and India. He was moving abroad for education and employment. He had many girlfriends. Their names are found in the Demo purse. In the All Tab, he had their numbers and a short note about each. 'There is nothing boring in this world to have sex with the same girl' was posted in his All Tab profile.

The doctor who saved him read the statement and showed false anger at him. He exclaimed 'Oh my pity'

Jessiya brought her son to India.







In India, he was more peaceful than before. He was always staring at something with a blank look. He had changed a lot. He had never been quite like this and lying on the bed. He was shocked by a small sound. His brain seemed to be squeezed and dried. He seemed to be in deep penance. He is not interested in anything. Some unrelated thoughts whirled in his mind. His mind experienced a tsunami of thoughts. Some historic events

come to his mind, confuse him and threaten him. These gave him a shock and collapsed him. He was always thinking about something and kept tight-lipped.

Weeks rolled on. Dev remained the same. No change or improvement was noticed. Parents felt even love and marriage would be strange or exciting for him.

He met King Rajendra Chola in his dreams. Or it might be that he was in the dreams of King Rajendra Chola. Without knowing who is in whose dream, he watched like a cinema running on the television for twenty-four hours. There was software instilled in the television to mix and match the film pairs. Anthanan is good at this.

He mixed Minto's scenes in Rajini's films. He replaced K.R Vijaya with Thrisha in Sivaji's movies and enjoyed watching Sivaji with Thrisha with rolling tears and long dialogues. Dev felt his father's taste in this mix-and-match was horrible.

Dev knew that his dad is doing such mix and match to entertain him and make him feel happy and relaxed. But he pitied him. His father could not understand his problem or he was not capable enough to express that to him. This incapability makes him feel disabled. He was gazing at the guava tree. His parents were afraid of watching Dev speak to himself.

When the parents were thinking, 'What to do if the same condition persists'? Dev's

All Tab rang. Somebody is calling him. Dev took his Tab and saw. It was from his Korean office. He heard the voice asking him, 'Can you come and join the duty from Wednesday? "

His dad started convincing him, 'Please join the duty. It is very sad and pathetic to see you lying idle'. He wanted to consult his doctor Maran, who is treating his son from Malaysia. He was continuing all tests through the All Tab.

Anthanan reached him via a video call and the doctor went through the medical records. He felt 'Dev needs rest, but instead of being idle he could do some work'.

The doctor told Dev, 'In the tsunami your brain had changed so before going to Korea you come and meet me'. Then the doctor relaxed in his chair and closed his eyes. Although thirty hundred people are involved in the Mars Metropolis project, the key person is only Dev. King Rajendra Chola's interference with Dev worries the doctor.

# காமன் பண்டிகை எனும் காமுட்டி விழா

**அண்ணாமலை சுகுமாரன்**



உலகம் முழுவதும் பிப்ரவரி 14, காதலர் தினம் என்று கோலோகலத்துடன் கொண்டாடப்படுகிறது .ஆனால் தமிழகத்தில் காமனுக்கு என்று காதலுக்காக பண்டைய நாள்தொட்டு ஒருவிழா காதலுக்குக் கடவுளான காமனுக்கு சுமார் 70 ஆண்டுமுன் வரை கொண்டாடினர். .

தமிழக ஊர்கள் பலவற்றில் மாசி மாதம் பிறந்ததும் இந்த காமன் பண்டிகை கொண்டாடப்படும் .சில ஊர்களில் பலத்தெருக்களில் கொடாடப்படுவதும் உண்டு .அது காமன் பண்டிகை என்பது மருவி காமுட்டி என்று அழைக்கப்பட்டது.

தேவர்களுள் அழகில் மிகுதியானவனாகக் கருதப்படும் மன்மதனுக்கான பெயர்களை, காம தெய்வன், அனங்கன், மகரக் கொடியுடையோன், ரதிகந்தன், மாறன், கந்தர்வன், மதனன், புஷ்பவனன், புஷ்பதானுவன், வசந்தன் என அடுக்கிக்கொண்டே போகலாம்.

பண்டைய தமிழ் இலக்கியங்களில் மன்மதன் திருமாலின் மகன் என்றும் அவர் பிரம்மாவின் மானசீக புதல்வன் என்றும் இரு வெவ்வேறு கதைகள் கூறப்படுகின்றன. ரதி சிவனின் மகள் என்றும், தட்சனின் வியர்வையிலி ருந்து தோன்றி யவள் எனவும், இரு மாறுபட்ட கதைகள் ரதியைப் பற்றி உண்டு உண்டு.

மன்மதன் - ரதி இருவருக்கும் கொஞ்சுங்கிளி வாகனமும், கரும்பு வில்லும் பொதுவாக இருந்தாலும் காமக்கணையினை தொடுக்கும் வேலையை மன்மதன் ஒருவரே செய்கிறார்.



தேவர்களின் வேண்டுகோளின் படி தொடர்ந்துவந்த சிவனின் தியானத்தை கலைக்கக் கிளம்பிய மன்மதனிடம் ரதி தனது கனவில் எமன் உள்ளிட்ட பூதகணங்கள் வருவதாகக் கூறி தடுத்தாள். ஆனாலும் அதை எதையும் கேட்காமல் தனக்கிட்ட கட்டளையை நிறைவேற்றக் கரும்பு வில்லில் நாண் பூட்டி சிவனின் மீது எய்தார் மன்மதன்.

இதனால் சினங்கொண்ட சிவபெருமான் கோபத்தில் மன்மதனை எரித்து விடுகிறார். பின், ரதி சிவனிடம் மன்றாடி முறையிடுகிறாள். மனம் இர ங்கிய சிவன் ரதிக்கு மட்டும் தெரியும்படி மன்மதனை உயிர்த்தெழச் செய்தார்.

இதுதான் இந்த விழாவின் பின்னணிக்கதை

இது தொடர்ந்து சில நாட்கள் இரவில் நடக்கும் .

அப்போது எரிந்தக்கட்சி , எரியாதக்கட்சி என்று இருபிரிவாகப்பிரிந்து பாடல் பாடி தீவிரமாக விவாதம் நடக்கும் .

இதற்க்கு இலாவணி என்று பெயர் .இது ஒரு மராட்டிய சொல் என்றுக்கூறப்படுகிறது. இலாவணி என்பது மத்திய இந்தியாவின் பழம்பெரும் கிராமிய இசைப் பாடல் கலை. மகாராட்டிரம், தெற்கு மத்தியப் பிரதேசம், கர்நாடகம் ஆகிய பகுதிகளில் பிரபலமாக உள்ளது.



அறுநூறு ஆண்டுகளுக்கு முன் கி.பி.1400-களில், தமிழகத்தின் தஞ்சாவூர் பகுதியை தஞ்சாவூர் மராட்டிய மன்னர்கள் ஆட்சி செய்தபோது, அவர்களோடு தஞ்சைக்கு இக்கலையை கொண்டு வந்ததாக, நாட்டுப்புற ஆய்வுகளிலிருந்து அறியமுடிகிறது.

சங்ககாலத்திற்கு முன்னரே, வேறு பெயரில் இக்கலை தமிழகத்தில் வேர் ஊன்றி இருந்ததாகவும், ஒரு சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

லாவணி என்ற சொல்லுக்கு, மராட்டி மொழியில் நாற்று நடுதல் என்ற பொருள் உள்ளது. வயலில் வேளாண் பணி புரியும் பெண்கள், உழைப்பின் களைப்பு தெரியாமல் இருக்க,ஒருவருக்கு ஒருவர் கிண்டல்-கேலி செய்யும் விதமாக,

இயல்பான கிராமிய இசைப் பாங்குடன் பாடத்தொடங்கியதே லாவணிக்கலையின் தொடக்கம் என சில ஆய்வுகள் நிறுவுகின்றன.

மராட்டியர்கள், தஞ்சையை ஆண்ட காலகட்டத்தில், இக்கலை வேகமாக தமிழகமெங்கும் பரவத்தொடங்கிற்று. இக்கலையில் மேடையில் இருவர் எதிர் எதிர் அமர்ந்து, ஒருவரை ஒருவர் ஏளனம் செய்து விவாதிப்பது போலப் பாடுவர்.லாவணி' நாட்டுப்புற இசைக்கலையில் முக்கியமானதாகும்.



மாசி மாதம், மக நட்சத்திரத்தன்று கொண்டாடப்படும் "காம தகன விழா'வில் "லாவணி' நிகழ்த்தப்படும். ஆரம்பத்தில் "லாவணி'யைப் பாடுவதற்கும், அதை காண்பதற்கும் ஆண்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டார்கள்.

அதற்குக் காரணம், இந்த "லாவணி' என்பது காமச்சுவை நிறைந்த பாடல்களால் அதிகம் நிரம்பியிருந்தது என்பதால்தான்.

பிறகு, இந்த "லாவணி'யை வரையறை செய்த பிறகு, பெண்களும் அதிகம் பங்கேற்க ஆரம்பித்தார்கள்.

முதலில் இரு ஆண்கள் எதிர் எதிராக அமர்ந்து, "எரிந்த கட்சி', "எரியாத கட்சி' என்று பிரிந்து "லாவணி'யைப் பாடுவார்கள். இந்தப் பாடலின் முடிவில் காமன் எரிக்கப்படும் நிகழ்ச்சி "காம தகன விழா'வாக கொண்டாடப்படுகிறது

லாவணி கலை குறித்து பத்து ஆண்டுகாலம் ஆய்வு செய்து, முனைவர் பட்டம் பெற்ற, தஞ்சாவூரைச் சேர்ந்த பேராசிரியர் விவேகானந்த கோபாலனின் வரலாற்று ஆய்வுகளை பின்புலமாகக் கொண்டு, எழுத்தாளர்-இயக்குநர் எஸ்.ராஜகுமாரன் இந்த லாவணி எனும் ஆவணப்படத்தை இயக்கியிருக்கிறார்

பண்டைய தமிழக பார ம்பரிய விழா ஒன்று சிறுக சிறுக மறைந்து வருகிறது .

# காதலும் கற்பும்

***டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை***



*காதல் என்பது காதுக் கினிய சொல்; கருத்துக்கினிய பொருள். காதல் உண்டாயின் இவ்வுலகில் எல்லாம் உண்டு; காதல் இல்லையேல் ஒன்றும் இல்லை. "காதல், காதல், காதல் - இன்றேல் சாதல், சாதல், சாதல்" என்று பாடினார் பாரதியார். ஆயினும், அச்சொல்லை எல்லோரும் கூசாமல் பேசுவதில்லை. சின்னஞ் சிறியவர் காதில் அது விழலாகாதாம். கன்னியர் வாயில் அது வரலாகாதாம். இப்படி ஏன் அச்சொல் ஒதுக்கப்படுகின்றது? தமிழ்க் கவிகள் காதல் என்ற சொல்லை எடுத்தாளவில்லையா? நீதி நூல்களில் அச்சொல் வரவில்லையா? திருப்பாடல்களில் அஃது இடம் பெறவில்லையா? காவியங்களிலும், நீதி நூல்களிலும் திருப்பாசுரங்களிலும் பயின்ற அழகிய தமிழ்ச் சொல்லை ஏன் கூசிக் கூசிப் பேச வேண்டும்? தேவாரத்திலே அடியாரது காதல் பேசப்படுகின்றது.*

*"காதலாலே கருதும் தொண்டர்*
*காரணத்தர் ஆகி''*

*நின்ற சிவபெருமானைச் சுந்தரர் பாடுகின்றார். இன்னொரு பெரியார் - திருஞானசம்பந்தர் - இறைவன் திருநாமத்தை ஓதும் காதலடியார் பெருமையைக் கூறுகின்றார்.*

*"காத லாகிக் கசிந்து கண்ணிர் மல்கி*
*ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது*
*வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது*
*நாதன் நாமம் நமச்சி வாயவே"*

*என்பது அவர் திருப்பாட்டு. இவ்வாறு தேவாரம் முதலிய தெய்வப் பாடல்களில் பயின்ற காதல் என்ற சொல்லைக் கடி சொல்லாகக் கருதலாமோ?*

*காதல் என்ற சொல்லின் பொருள்தான் என்ன? அன்பு என்றாலும் காதல் என்றாலும் பொருள் ஒன்றே. பெற்றோர்க்குப் பிள்ளையிடம் உள்ள அன்பு காதல்தான். 'கடந்த பேர்களும் கடப்பரோ மக்கள் மேல் காதல்' என்று கவிஞர் பாடவில்லையா? பெற்ற பிள்ளையைக் காதலன் என்று கூறுவதுண்டு. வாலியின் மைந்தனாகிய அங்கதனை 'வாலி காதலன்' என்று குறிக்கின்றார் கம்பர்.*

இவ்வாறே நண்பனையும் காதலன் என்று கவியரசர் கூறுவர். கங்கைக் கரையிலே இராமனுடைய நண்பனாயினான் குகன்; அவன் அன்பிற்குக் கங்கை கரையில்லை. அது கண்ட இராமன்,

"சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் தீராக்
காதல னாகும் என்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினும் இனிய நண்ப இருத்தி ஈண்டு எம்மொடு என்றான்''

எனவே பக்தியும் காதல்; பிள்ளைப் பாசமும் காதல்; நேசமும் காதல்; சுருங்கச் சொல்லின் தலைசிறந்த அன்பே காதல்.



இவ்வளவு விரிந்த பொருளில் வழங்கிய காதல் என்ற சொல், இப்பொழுது ஆண் பெண் என்னும் இரு பாலாரிடையே உள்ள அன்பையே பெரும்பாலும் குறிக்கின்றது. காதலன் என்றால் கணவன்; காதலி என்றால் மனைவி. இவ்விருவரையும் இல்வாழ்க்கையில் இழுப்பது காதல், பின்பு இல்வாழ்க்கையை நல்வாழ்க்கையாக நடைபெறச் செய்வதும் காதல். கண்ணிரண்டும் ஒன்றையே காண்பதுபோல இல்வாழ்க்கையில் ஈடுபட்ட இருவரையும் ஒரு நெறிப்படுத்துவது காதல். "காதல் மனையாளும் காதலனும் மாறின்றித் தீதில் ஒரு கருமம் செய்பவே" என்றார் ஒரு கவிஞர்.



ஆதியில், காதல் மணமே தமிழ் நாட்டில் சிறந்து விளங்கிற்று. காதல் இல்லாத வாழ்க்கை உயிரில்லாத உடல் போன்றது என்பது தமிழர் கொள்கை. காதலுற்ற கன்னியர், தம் கருத்து நிறைவேறும் வண்ணம் காமனை வேண்டிக்கொள்ளும் வழக்கமும் முற்காலத்தில் இருந்ததாகத் தெரிகின்றது. காதல் விளைக்கும் தேவனைக் 'காமன்' என்றும், 'காமவேள்' என்றும் தமிழர் அழைத்தனர். தாம் கருதிய காதலனைக் கணவனாகப் பெறுவதற்கும், பிரிந்த கணவனை மீண்டும் அடைவதற்கும், காமன் கோயிலிற் சென்று மங்கையர் வழிபடும் வழக்கம் அந்நாளில் இருந்தது. கோவலன், மாதவி என்னும் நடிகையின் மையலிலே முழ்கித் தன் மனைவியாகிய கண்ணகியைப் பிரிந்திருந்தபோது, 'காமவேள் கோயிலிற்

சென்று தொழுதால் கணவன் மீண்டும் வந்து சேர்வான்' என்று அக்கற்பரசியிடம் அவள் உயிர்த் தோழி எடுத்துரைத்தாள்.

"கடலொடு காவிரி சென்றலைக்கும் முன்றில்
காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
தாமின் புறுவர் உலகத்துத் தையலார்"

என்று கூறினாள் தோழி. இதனால், காவிரிப்பூம்பட்டினத்தில் அந்த நாளிலே காமன் கோயில் இருந்த தென்றும், குலமாதர் அங்குச் சென்று வழிபடும் முறை இருந்ததென்றும் நன்றாக விளங்குகின்றன. இன்றும், தமிழ் நாட்டின் பல பாகங்களில் காமன் பண்டிகை கொண்டாடப்படுகின்றது. 'ஈசனுடைய நெற்றிக் கண்ணால் காமன் எரிந்துபோனான்' என்று வாதிப்பாரும், அப்படியில்லை என்று சாதிப்பாரும் இக்காலத்தும் தமிழ் நாட்டிலுண்டு.

காமம் என்ற சொல்லும், காமன் என்ற பெயரும் தமிழ் நூல்களிலே எடுத்தாளப்பட்டாலும் இன்று அவை இழிந்த பதங்களாகவே எண்ணப்படுகின்றன. காமம் என்பது வடசொல்; இன்பம் என்னும் பொருள் அதற்குண்டு. உறுதிப் பொருள்களைத் "தர்மார்த்த காம மோட்சம்'' என்று வடமொழியாளர் கூறுவர். இவ்வடமொழித் தொடருக்கு நேரான தமிழ், "அறம் பொருள் இன்பம் வீடு'' என்பது. எனவே, காமம் என்பது இன்பம் என்ற பொருளைத் தருகின்றது. திருவள்ளுவர் காலத்தில் காமம் இழிந்த சொல்லாகக் கருதப்படவில்லை என்று தெரிகின்றது. அறம் பொருள் இன்பம் என்ற முப்பாலைப் பற்றி எழுதிய திருவள்ளுவர் இன்பப் பகுதிக்குக் காமத்துப் பால் எனப் பெயரிட்டார் என்றால், அவர் காலத்தில் காமம் இழிந்த சொல்லாகக் கருதப்படவில்லை என்பது தெரிகின்றதல்லவா?

ஆயினும், கால கதியில் காமம் என்பது துன்மார்க்கத்திற் பெறும் இன்பத்தைக் குறிப்பதாயிற்று. காமி, காமுகன் முதலிய சொற்கள் தூர்த்தன் என்ற பொருளிலே வழங்குகின்றன. காமுகன், கல்வி கற்பதற்கும் தகுதியற்றவன் என்று நன்னூல் கூறுகின்றது.

இனி, காதலுக்கும் கற்புக்கும் உள்ள தொடர்பைச் சிறிது பார்ப்போம்; காதல் என்பது உணர்ச்சி, கற்பு என்பது ஒழுக்கம். உணர்ச்சியால் ஒன்றுபட்ட நம்பியும் நங்கையும் (தலைமகனும் தலைமகளும்) ஒருவரையொருவர் தமக்கே உரியவராகக் கொண்ட நிலையிலே தோன்றும் ஒழுக்கமே கற்பு என்பர்.

சீதையின் காதலில் வைத்து இந்த உண்மையைக் காட்டுகின்றார் கம்பர். மிதிலை மாநகரத்தில் கன்னி மாடத்தின் மேடையிலே நின்ற சீதையும் விதியின் வழியாகச் சென்ற இராமனும் தற்செயலாக ஒருவரை யொருவர் நோக்கினர். இருவர்

கண்ணோக்கும் ஒத்தது; காதல் பிறந்தது. காதலர் இருவரும் ஒருவர் இதயத்தில் ஒருவர் புகுந்து உறவாடினர்.

இந்த நிலையில் இராமன் தன்னுடன் வந்த தம்பியோடும் முனிவரோடும் வீதியிற் சென்று மறைந்துவிடுகின்றான். அவன் இன்னான் என்று அறியாள் சீதை. அவன் எங்கே சென்றான் என்பதும் உணராள்; ஆயினும், அவனையே கருத்தில் அமைத்துக் கரைந்து உருகுகின்றாள். அந்த வேளையில் ஓடி வருகின்றாள் அவள் தோழியாகிய நீலமாலை; ஆனந்தமுற்று ஆடுகின்றாள்; பாடுகின்றாள். "தோழி! என்ன செய்தி?' என்று கேட்கின்றாள் சீதை. அப்போது தோழி சொல்கின்றாள்: "அயோத்தி அரசனுடைய மைத்தன்; அஞ்சன வண்ணன்; செந்தாமரைக் கண்ணன்; அவன், தம்பியோடும் முனிவரோடும் நம் மாளிகைக்கு வந்தான்; உன் திருமணத்திற்காக வைத்திருந்த வில்லைக் கண்டான்; எடுத்தான்; வளைத்தான்; ஒடித்தான்'' என்று கூறி முடிக்கின்றாள்.

அப்பொழுது சீதையின் மனம் ஊசலாடத் தொடங்கிற்று; கவலையும் உண்டாயிற்று. வில்லை எடுத்து வளைத்து ஒடித்த வீரன், தான் கன்னி மாடத்திலிருந்து கண்ட ஆடவனோ? அல்லனோ? என்ற ஐயம் பிறந்தது. அவனாகத்தான் இருக்க வேண்டு மென்று ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டு, தோழி சொல்லிய அடையாளங்களை மீளவும் நினைத்துப் பார்த்தாள்.

"கோமுனி யுடன்வரு கொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினான் என்ற தன்மையினால்
ஆம்அவ னேகொல்என்று ஐயம் நீங்கினாள்.''

ஆனால், நொடிப்பொழுதில் மற்றொரு கருத்து அவள் மனத்தில் புகுந்தது. "என் தோழி சொல்லிய அடையாளங்கள் எல்லாம் உடைய மற்றொருவன் வில்லை வளைத்து ஒடித்திருந்தால் நான் என்ன செய்வேன்? என்று அவள் எண்ணினாள்; ஏங்கினாள்.

அந்த ஏக்கத்தினிடையே ஓர் ஊக்கம் பிறந்தது; உணர்ச்சியினிடையே ஒழுக்கம் எழுந்தது. காதல் கற்பாக உருவெடுத்தது. "அவன் அல்லனேல் இறப்பேன்' என்று சீதை முடிவு செய்தாள். கண்ணாற் கண்ட காதலனும் வில்லை ஒடித்த வீரனும்

ஒருவனேயாயின் அவனை மணம் புரிந்து வாழ்வேன்; இல்லாவிட்டால் இறந்து படுவேன்'' என்று உறுதி கொண்டாள் சீதை. கற்பு நெறி என்பது இதுதான். காதலனையன்றி மற்றோர் ஆடவனை மனத்திலும் கருத ஒருப்படாத உறுதியே கற்பு எனப்படும். இதையே திருவள்ளுவர் வியந்து பாடினார்.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்"

என்பது அவர் திருவாக்கு.



கற்புடைய மாதரிடம் மென்மையும் உண்டு; மனத்திண்மையும் உண்டு. பொறுக்கும் திறமும் உண்டு; மாறுபட்டோரை ஒறுக்கும் திறமும் உண்டு. சிலப்பதிகாரத்தின் கதாநாயகியாகிய கண்ணகியிடம் இவ்விரு தன்மைகளையும் பார்க்கின்றோம். கொண்ட கணவன் அவளுக்குக் கொடுமை செய்தான்; செல்வத்தையெல்லாம் செலவழித்தான். அல்லும் பகலும் அயலார் அறியாமல் கண்ணீர் வடித்தாள் கண்ணகி; மங்கல அணியைத் தவிர மற்றைய நகைகளையெல்லாம் மறந்தாள்; தன்னை அழகு செய்து கொள்ளவேண்டும் என்ற எண்ணத்தை அறவே துறந்தாள்.

"அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்ப
பவள வாள்துதல் திலகம் இழப்ப
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி''

என்று கூறுகின்றது சிலப்பதிகாரம். அடக்கமும் பொறுமையும், கற்பும் கண்ணீரும் கண்ணகியின் வடிவம். "கண்டார் வெறுப்பனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்" என்று ஆழ்வார் பாடிய திருப்பாட்டுக்கு ஓர் எடுத்துக் காட்டாக அமைந்தாள் கண்ணகி.

இத்தகைய மென்மையும் பொறுமையும் வாய்ந்த கண்ணகி, மதுரை மாநகரில் தன் கணவனை இழந்த போது வன்மையின் வடிவம் கொண்டாள்; கற்பெனும் திண்மை அவ்வடிவத்திலே களிநடம் புரிந்தது. அத்திண்மையைக் கண்டு திடுக்கிட்டான் அரசன்; அப்பால் அவள் பேசிய திடமொழியைக் கேட்டபோது மயங்கிவிழுந்து மாண்டான். தவறு செய்த அரசனைக் கற்பின் திண்மையால் ஒறுத்த கண்ணகி, வீரபத்தினியாகத் தமிழ் நாட்டிலே போற்றப்பட்டாள். அன்று முதல் இன்றளவும் கண்ணகி, மாதர்குல மணி விளக்காய், வீரக்கற்பின் விழுமிய கொழுந்தாய் விளங்குகின்றாள்.

(சென்னை வானொலி நிலையத்திலே பேசியது; நிலையத்தார் இசைவு பெற்றுச் சேர்க்கப்பட்டது)

# தமிழும் நானும்

***முனைவர் சிவ. இளங்கோ***
*எழுத்தாளர். வரலாற்று ஆய்வாளர், புதுச்சேரி*



***கேள்வி: உங்களைப் பற்றி...***

***பதில்:*** *என் பெயர் இளங்கோ. என் தந்தையார் பெயர் சிவப்பிரகாசம். அதனால் தலைப்பு எழுத்துடன் சி. இளங்கோ என்று எழுதினேன். சக மாணவர்கள் என் பெயரை சீ. இளங்கோ என்று கிண்டலாகக் கூப்பிடுவதைக் கண்ட தமிழ் ஆசிரியர், "நீ உங்க அப்பா பெயரில் இரண்டு எழுத்து வருகிற மாதிரி சிவ என்று தலைப்பெழுத்தைப் போட்டுக் கொள்" என்றார். அதிலிருந்து சிவ. இளங்கோ ஆனேன். என் சொந்த ஊர் புதுச்சேரி. அதனால் கவிதை, கட்டுரை எழுதும் போது என் ஊரைச் சேர்த்து புதுவை சிவ. இளங்கோ என்று எழுதினேன். முனைவர் பட்டம் முடித்த பிறகு முனைவர் சிவ. இளங்கோ என்று எழுதினேன். அதுவே நிலைத்து விட்டது. கவிதை, கட்டுரைகள், திறனாய்வு, மொழிபெயர்ப்பு, நாடகம், சிறுகதை என்று தமிழில், பல துறைகளில் எழுதி வருகிறேன். தமிழிலக்கியம், வரலாறு, தொல்லியல், இந்தியத் தத்துவங்கள், தமிழ்ச் சமயங்கள், அயோத்திதாசர், அம்பேத்கரிய, பெரியாரிய, திராவிட இயக்கப் பொருண்மைகளில் தொடர்ந்து ஆய்வுகள் மேற்கொண்டு வருகிறேன்.*

***கேள்வி: பள்ளி, கல்லூரி வாழ்க்கை பற்றி...***

***பதில்:*** *புதுச்சேரியில் தான் படித்தேன். முதலில் தனியார் பள்ளி. ஆறாம் வகுப்பில் இருந்து அரசுப் பள்ளி. முதுகலை வரை கலைக்கல்லூரி. புதுவைப் பல்கலைக்கழகத்திலும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திலும் மேற்படிப்பு ஆய்வுகள். பள்ளி வாழ்க்கையில் இந்தி எதிர்ப்புப் போராட்டமும், கல்லூரி வாழ்க்கையில் கருணாநிதி - எம் ஜி ஆர் பிரிவினையால் ஏற்பட்ட நிகழ்வுகளும் மறக்க முடியாதவை.*

***கேள்வி: தமிழ் ஆர்வம் எப்படி?***

***பதில்:*** *அது இயல்பானது. என் தந்தையார் ஒரு தமிழ்ப் புலவர். மரபுப் பாடல்கள், தமிழிசைப் பாடல்கள், கட்டுரைகள், நாடகங்கள் என்று நிறைய எழுதியவர். எனக்குப் பள்ளியிலும், வீட்டிலும் தமிழ் பயிற்றுவித்தவர். 1965 ஆம் ஆண்டில் நான் பள்ளி மாணவனாக இருந்த பொழுது நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டம் எல்லோரையும் தமிழ் உணர்வு மிக்கவர்களாக ஆக்கியது. பாரதியார், பாரதிதாசன், பிற கவிஞர்கள் என்று தமிழில் தேடித் தேடிப்*

படித்தோம். அறிஞர் அண்ணாவின் அறிவுரைப்படி இல்லங்களில் நூலகங்களை அமைத்துக் கொண்டோம். கல்லூரிக் காலங்களில் தமிழ் இலக்கியங்கள் அறிமுகமாயின. தொடர்ந்து நூலகங்களில் தமிழ் இலக்கியத் தேடல். நாள், வார, மாத இதழ்கள் வாசிப்பு. சமூக அக்கறை. அரசியல் ஆர்வம். மார்க்ஸ், பெரியார், அம்பேத்கர் எழுத்துகள் அறிமுகம். எழுச்சிமிக்க இளைஞர் பட்டாளம் உருவாகியது. எத்துறையில் நுழைந்தாலும் தமிழை முதன்மைப் படுத்துவதில் முனைப்புக் காட்டினோம்.

***கேள்வி: தமிழ் ஆர்வம் தழைக்க உறுதுணை?***

***பதில்:*** தமிழ் ஆர்வத்திற்குக் குடும்பப் பின்னணி தான் முதல் காரணம் என்று முன்பே கூறிவிட்டேன். அதற்கு அடுத்ததாகத் திராவிட இயக்கம் அமைந்தது. திராவிட இயக்கத் தலைவர்களின் எழுத்தும், பேச்சும், பிரெஞ்சு, ஆங்கில இலக்கியங்களில் இருந்து அவர்கள் தமிழுக்குக் கொண்டு வந்து சேர்த்த இலக்கிய அறிமுகங்களும் என் இளமைக்காலச் சமுதாயத்தின் தமிழ் உணர்வைப் பெருமளவில் தூண்டி விடக் காரணமாயின. நான் அமைச்சகப் பணியில் இருந்தேன். அதனால் என் கல்வியும், தமிழார்வமும் என் பணியால் மேம்படுத்தப்படும் வாய்ப்பு இல்லாமல் போனது. பள்ளி, கல்லூரிக் காலங்களில் வரலாறும், தமிழும் விருப்பப் பாடமாகக் கொண்டதால் அவை உள்ளுக்குள் வளர்ந்து கொண்டே வந்தன. என் பணி நேரம் போக, பிற நேரங்களில் தமிழ், வரலாறு குறித்த ஆய்வுகளும், எழுத்தும் என் இலட்சியப் பொழுதுபோக்காயின.

***கேள்வி: தமிழுக்கு என்ன பங்களிப்பு? (எழுத்து, பதிப்பு, இதழ்கள், இணையதளம், மொழிபெயர்ப்பு)***

***பதில்:*** எழுத்தில் கவிதைகள் தான் அதிகம். பதின்ம வயதிலேயே தொடங்கி விட்டது கவிதை. ஒரு நட்பு பிரிந்த போது, காதலாகி இருந்ததைச் சற்றுத் தாமதமாக உணர்ந்த மனம் புலம்பித் தள்ளியது. கல்லூரிக் காலத்தில் தமிழ், இயற்கை என்று கவிதைகள் சுரந்தன. மரபுக் கவிதை, புதுக்கவிதை, இசைப் பாடல்கள், ஹைக்கூ என்று ஏராளமாய் இருக்கின்றன. அவற்றில் பெரும்பாலும் இதழ்களில் வெளிவந்தவை. ஆனால் இன்னும் ஒரு தொகுதி கூட வெளியாகவில்லை.

தற்போது கட்டுரைகள் தான் அதிகம். சமூகம் சார்ந்தும், வரலாறு, தொல்லியல் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகளும் பல்வேறு இதழ்களில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. இதழ் நடத்த வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. இப்போது நிச்சயமாக இல்லை. மொழி பெயர்ப்பில் அவ்வளவாக ஈடு பட்டதில்லை. ஆனால் அண்ணல் அம்பேத்கரின் கடிதங்களை ஆங்கிலக்

*கடிதங்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் ஒரு பேர் அனுபவம் எனக்குத் தமிழ் மரபு அறக்கட்டளை வழி கிடைத்தது. அதில் மொழிபெயர்ப்பு பற்றிய நிறைய நுணுக்கங்களை அறிந்து கொண்டேன். மேலும், அண்ணல் அம்பேத்கரின் வரலாற்றில் நிறைய உள்ளிருப்புச் செய்திகளை அறிய முடிந்தது.*



*என் தந்தையார் 1940களில் ஒரு பதிப்பகம் தொடங்கினார். அதன் பெயர் ஞாயிறு நூற்பதிப்பகம். அது பிரஞ்சிந்திய அரசாங்கத்தின் பதிவு பெற்றது. அதன் வழித் தன்னுடைய கவிதை, நாடக நூல்களையும், தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன், பிற திராவிட இயக்க முன்னணித் தலைவர்களின் படைப்புகளையும் வெளியிட்டு வந்தார். அப் பதிப்பகத்தின் வழி நானும் என்னுடைய நூல்கள் சிலவற்றை வெளியிட்டேன். பிற பதிப்பகங்களும் என்னுடைய நூல்களை வெளியிட்டு வருகின்றன.*

*இணையதளத்தை நான் சிறப்பாகப் பயன்படுத்தவில்லை என்று எண்ணுகிறேன். புலனம், முகநூல் போன்றவற்றில் அவ்வப்போது எழுதுவது உண்டு. முகநூலில் நிறைய நட்பும், பின் தொடர்போரும் இருப்பது பல நேரங்களில் மகிழ்வைத் தரும்.*

***கேள்வி: தமிழின் மேம்பாட்டுக்கு என்னென்ன செய்ய வேண்டும்?***

***பதில்:*** *வாய்ப்பு உள்ளவர்கள் எழுத வேண்டும். வரலாறு எழுதுபவர்கள், அதில் ஆய்வு செய்பவர்கள் உண்மையைக் கண்டறிந்து உலகிற்குச் சொல்ல வேண்டும். அரைகுறை வாசிப்பும், உள்நோக்கமும் இன, மொழி எதிரிகளாகி விடும். ஏதோ*

ஒரு காரணத்திற்காக எழுத்தின் போக்கை வளைத்தல் கூடாது. இவை என் எழுத்தின் கொள்கைகள். எளிமையான இவற்றை எல்லோரும் ஏற்றால் உண்மை வரலாறும், தமிழின் உண்மையும் வெளிப்படும். தமிழின் மேம்பாட்டிற்கு அரசாங்கமும் உருப்படியான திட்டங்களைத் தீட்ட வேண்டும்.

**கேள்வி: எதிர்காலத்தில் தமிழ் சார்ந்த திட்டங்கள். ....**

***பதில்:*** முன்பு நிறைய இருந்தன. இப்போது குறைந்து விட்டன. இதுவரை எழுதியவற்றையெல்லாம் தொகுத்து நூல்களாக வெளியிட வேண்டும் என்பது நிறைவேறக்கூடிய திட்டம்தான். மேலும், இந்தியச் சமயங்களின் இயற்கைக் கோட்பாட்டை நிறுவுவது; தொல்லியல் ஆய்வுகளில் ஆரியக் கலப்பைத் தவிர்ப்பது; வேற்று மொழி ஆதிக்கம் இல்லாமல் தமிழ் மொழியை நிலை நிறுத்துவது இவையெல்லாம் நீண்ட காலத் திட்டங்கள். அதுவரையில் இதில் ஈடுபடுபவர்களின் ஆயுள் இருக்கப் போவதில்லை. ஆசைப்படலாம்; அதற்காகச் சில துரும்புகளை மட்டுமே அசைக்க முடியும். என்றாலும், இயங்கிக் கொண்டேதான் இருக்கப் போகிறோம். தனிப்பட்ட முறையில் ஒவ்வொருவருக்கும் எவ்வளவோ திட்டங்கள் இருக்கும். ஆனால் அரசாங்கம் தீட்டுகிற திட்டங்களும் ஒருங்கிணைப்பும் தான் முறையான பயன்பாட்டைக் கொண்டு வரும். அறிஞர் அண்ணா முதலமைச்சராக இருந்த பொழுது, 1968 ஆம் ஆண்டில், இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டை சென்னையில் நடத்தினார். உலகம் முழுவதும் தமிழர்களுக்கான ஓர் ஒப்பற்ற காலமாக அது இருந்தது. அந்த மாநாட்டில் அவர் மாபெரும் தமிழ்க் கனவை விரித்தார். அதில் ஒன்றுதான் அவர் விரும்பிய, தற்போது சென்னை, தரமணியில் உள்ள "உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்". ஆனால், அண்ணாவின் கனவை அது மெய்ப்படுத்த வில்லை. அண்ணாவின் குறுகிய கால வாழ்வால் தமிழும், தமிழ்நாடும் இழந்தவை அதிகம். அவருக்குப் பிறகு வந்த அரசாங்கங்கள் தமிழ் மேம்பாட்டிற்காக, அவ்வப்போது ஏதாவது செய்ய நினைக்கின்றன. சிறிதளவு செய்கின்றன.

என்னைப் பொருத்த அளவில் செவ்வியல் மொழியான தமிழுக்குச் சங்க இலக்கியங்கள் போன்ற கிடைத்தற்குரிய கருவூலங்கள் இருக்கின்றன. ஆனால் வரலாறு தான் ஒவ்வொருவர் எழுத்திலும் மாறுபடுகிறது. அதிலும் தொல்லியல் என்பது சான்றுகளோடு நிறுவப்படுவது. அப்படி இருந்தும் அதிலும் நிறைய மாறுபாடுகள் வெளிப்படுகின்றன. வடபுலத்து ஆய்வுகளில் ஒரே போல வேதங்களை மையமாக வைத்து வெளிப்படுத்தப் படுவதில் அவர்கள் வெற்றி காணுகிறார்கள். ஆனால் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் வரலாறும், தொல்லியலும் ஒரே போல இல்லை. இங்கிருக்கும் ஆய்வாளர்களிடம் ஒரே கருத்து நிலவவில்லை. தமிழின் அறமும், மறமும் உயர்வையும், தாழ்வையும் கொண்ட வரலாறாக இருக்கிறது. ஒருவர் ஒரு கருத்து சொன்னால் அதை வடபுலம் எதிர்ப்பதற்கு முன்பாகவே, நமது தமிழ் சார்ந்தவர்களே அதனை

மறுத்து விடுகின்றனர். இந்தக் குறைபாடுகளை எல்லாம் நீக்கும் வகையில் ஓர் ஒருங்கிணைப்பை ஏற்படுத்த வேண்டும். ஆனால், துரோக உணர்வுகளும், தமிழ்ப் பகையும் அதிகமாகி வரும் தற்காலத் தமிழ்நாட்டில் அது நடக்குமா என்பது தான் தெரியவில்லை.



**கேள்வி: தொல்லியல் ஆய்விலும், உங்களுக்கு எப்படி ஆர்வம் ஏற்பட்டது?**

***பதில்:*** கீழடி அகழ்வாராய்ச்சிக்குப் பிறகு எல்லோருக்குமே தொல்லியலில் ஆர்வம் வந்துவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். கீழடி, சிவகளை, ஆதிச்சநல்லூர் போன்ற தொல்லியல் ஆய்வுக் களங்களுக்கு நேரில் சென்று பார்வையிட்டது தொல்லியலை ஆழமாகப் புரிந்து கொள்ள உதவியது. புதுச்சேரியில் அரிக்கன்மேடு, முத்திரப்பாளையம், சுத்துக்கேணி, வழுதாவூர், ஆரோவில் ஆகிய பகுதிகளில் உள்ள தொல்லியல் அகழ்வாராய்ச்சிப் பகுதிகளோடு உள்ள தொடர்பும் பழந்தமிழர் வாழ்வைக் கண் முன்னே அடிக்கடி கொண்டு வந்து நிறுத்தின. புதுச்சேரியைச் சுற்றியுள்ள தமிழகப் பகுதிகளான விழுப்புரம், திண்டிவனம் பகுதிகளும் அதிக அளவில் தொல்லியல் தரவுகள் அடங்கிய பகுதிகளாக இருக்கின்றன. இவையெல்லாம் சேர்ந்து ஏற்படுத்திய ஆர்வமும், அதனால் ஏற்படுத்திக் கொண்ட அறிவும் அதைப்பற்றி எழுத வைத்தன. அவை தொடர்பான தொல்லியல் ஆய்வு அறிக்கைகள் இணையத்தில் கிடைத்தன. நூல்களைத் தேடிப் படித்துத் தெளிவடைந்தேன். அவற்றுடன் என் பட்டறிவில் தொகுத்த செய்திகளையும் சேர்த்து ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வருகிறேன்.

**கேள்வி: இந்தியச் சமூகங்கள் குறித்த உங்கள் ஆய்வுகள் குறித்து…**

***பதில்:*** பழைமை வாய்ந்த சமயச் சிந்தனைகள் என்று பார்த்தால் தொடக்கத்தில் அதில் கடவுள் சிந்தனைகள் இல்லை. மனிதனின் வாழ்வு, பிற உயிரினங்களின்

வாழ்வு இவற்றை உற்று நோக்கும்போது எழுகின்ற சிந்தனைகளின் வளர்ச்சிப் போக்கில் மனிதன் நிலையாமையை உணர்ந்திருக்க வேண்டும். இறப்பிற்குப் பிறகு என்ன? என்னும் மாபெரும் கேள்விக்குறி, அந்த விடைக்கான தேடல், அதில் பலதரப்பட்ட கருத்துக் குவியல்கள், கருத்து மோதல்கள் இவையெல்லாம் தொகுக்கப்பட்ட கோட்பாடுகள் அடங்கியவை தான் ஆதிகாலச் சமயங்கள். சாங்கியம் என்னும் எண்ணியமும், சார்வாகம் என்னும் உலகாயதமும், நியாயம், வைசேடிகம், யோகம், பௌத்தம், ஆசீவகம் உள்ளிட்ட சமயங்கள் மிகப் பழமையானவை. இவை எல்லாவற்றையும் விடச் சமணம் தான் நீண்ட காலத்திற்கு முன் செல்கிறது. இங்கு நான் குறிப்பிட்ட சமயங்களில் கடவுள் கோட்பாடும், உருவ வழிபாடுகளும் இல்லை. வீடுபேறு, மறுபிறப்பு போன்றவற்றில் உறுதியான கருத்துகள் ஏதும் அப்போது இல்லை. கௌதம புத்தர், மற்கலி கோசாலர் ஆகியோரின் சமகாலத்தவர் வர்த்தமான மகாவீரர். ஆனால் அவரே 24 ஆவது தீர்த்தங்கரர். இவருக்கு முன்னர் 23 தீர்த்தங்கரர்கள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. அவர்களின் காலத்தைக் கணக்கிடும் போது சிந்துவெளி நாகரிகத்தோடு தொடர்புபடுத்தக்கூடிய சமயமாக சமணம் உள்ளது. சமண சமயத்தின் முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதர் சிந்துவெளியில் பிறந்து வாழ்ந்திருக்கலாம் என்பதை ஏற்றுக் கொள்வதற்கான சான்றுகள் அங்கே முத்திரைகளாகக் கிடைத்துள்ளன. எருதுகளின் கொம்புகளை மகுடமாக அணிந்து, சமணர்களுக்கே உரித்தான யோக நிலையில் அமர்ந்திருப்பது போல் கிடைத்திருக்கும் முத்திரை ரிஷபநாதர் (ஆதிநாதர்) என்று சொல்வதற்குப் பொருத்தமாக இருக்கிறது. ஆனால் இவரைப் பசுபதி என்று கூறும் திரிபுவாத வரலாறும் உடன் நுழைக்கப் படுகிறது . அறுபது, எழுபதுகளில் படித்த பள்ளி, கல்லூரிப் பாடங்களில் சிந்துவெளி நாகரிகம் என்பது திராவிட நாகரிகம் என்றுதான் அரசாங்கம் வெளியிட்ட நூல்கள் உட்பட அனைத்து நூல்களிலும் படித்திருக்கிறோம். ஆனால் 2000 ஆவது ஆண்டுக்குப் பிறகு அது சரசுவதி நாகரிகமாகக் கட்டமைக்கப் படுகிறது. வரலாற்றுத் திரிபுகளைச் சான்றுகளுடன் சரி செய்வதற்குப் பெரிதும் போராட வேண்டி இருக்கிறது. இந்தப் பணிகளில் ஈடுபடுபவர்களில் சிலர் மதம், சாதி அடிப்படையில் வேறுபட்டுப் போய் விடுகின்றனர். என்ன ஆனாலும் சாதி, மதங்களைக் கடந்த என் போன்றோரின் முயற்சிகள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

***கேள்வி: நீங்கள் அமைப்பு ரீதியாகத் தமிழ் வளர்ப்பவரா? அதன் ஈடுபாடு?***

***பதில்:*** சங்க காலத்தில் இருந்தே தமிழோடு புதுச்சேரி தொடர்பில் இருந்தது. வீரை வெளியனார், வீரை வெளியன் தித்தனார் என்று இரண்டு சங்கப் புலவர்கள் வாழ்ந்த பகுதி புதுவை. புதுச்சேரியின் தமிழ் ஆர்வலர்கள் புதுவைத் தமிழ்ச் சங்கம் உட்பட பல்வேறு தமிழ் அமைப்புகளிலும் உறுப்பினராக இருப்பார்கள். நானும் அப்படியே. என் தந்தையார் 1989 ஆம் ஆண்டு காலமான பிறகு

*அவருடைய பெயரால் "கவிஞர் புதுவைச் சிவம் இலக்கியப் பேரவை" என்ற அமைப்பைப் புதுவைத் தமிழறிஞர்கள் தொடக்கினார்கள். இப்பேரவை மூலம் ஆண்டுதோறும் விழாக்களும், தமிழ் எழுத்தாளர்களுக்கு விருதும் அளிக்கப்பட்டு வந்தது. மாதந்தோறும் கவியரங்கம், கருத்தரங்கம், ஆய்வரங்கம் என்று தொடர்ந்து பல்லாண்டுகள் நிகழ்ச்சிகளை நடத்தி வந்தோம். பின்னர் 1990 களில் "தமிழ் வளர்ச்சி நடவடிக்கைக் குழு" என்றோர் அமைப்பை இலக்கணச் சுடர் முனைவர் இரா. திருமுருகன் தொடக்கினார்.*

*நான் அதில் செயலாளராகப் பணிபுரிந்தேன். இதில் புதுவையின் அனைத்துத் தமிழ் அமைப்புகளும் இணைந்து செயல்பட்டன. புதுவையில் தமிழ் வளர்ச்சிக்காக நிறையப் போராட்டங்கள் நிகழ்த்தப்பட்ட காலம் அது. தமிழ் விழிப்புணர்வைத் தூண்டும் வகையில் புதுச்சேரி முழுமையும் தமிழ் அறிஞர்களின் நடைப்பயணம், புதுச்சேரியில் ஆட்சி மொழிச் செயலாக்கம், மழலையர் வகுப்பில் தமிழ், வணிக நிறுவனங்களில் பெயர்ப் பலகைகளில் தமிழ், பேருந்துகளில் தமிழ் அறிவிப்பு, பாரதிதாசன் கல்லூரிப் பெயர்ப் பலகைகள் தமிழில் மாற்றம், புதுச்சேரிப் பல்கலைக்கழகச் சின்னத்தில் தமிழ், பாண்டிச்சேரி எனும் பெயரைப் புதுச்சேரியாக மாற்றல் என்று பல பிரச்சனைகளை முன்வைத்துப் பேரணி, போராட்டம், பொதுக்கூட்டம், உண்ணாவிரதம், என்று நடத்திக் கைது செய்யப்பட்டு அரசாங்கத்தின் கவனத்தை ஈர்த்தோம்.*

*இதில் மேற்கூறிய அனைத்து கோரிக்கைகளும் ஏற்றுக்கொள்ளப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. தொடர்ந்து பல தமிழ் அமைப்புகள், சமூக அமைப்புகள் அத்தனையோடும் இணைந்து தமிழை முன்னிறுத்தியும், சமூக பிரச்சனைகளுக்காகவும் புதுச்சேரித் தமிழ் அன்பர்களோடு நானும் ஒருவனாகப் போராடிக் கொண்டிருக்கிறேன்.*

***கேள்வி: எழுத்தாளர்கள் பற்றிப் பொதுவாக உங்கள் கருத்து என்ன? பெருமைக்குரியதாக நினைக்கிறீர்களா?***

***பதில்:** காலமும், சமுதாயச் சூழலும் கைப்பிடித்து எழுதும் சரியான எழுத்தால் உலகையே மாற்றலாம். இதற்கு வால்டர், ரூசோ, கார்ல் மார்க்ஸ் போன்றோர் எடுத்துக்காட்டு. அடிமைப்பட்டு கிடக்கும் நாட்டில் புரட்சியாளர்கள் எல்லாம் எழுத்தாளர்களாக மாறுவார்கள் அல்லது அவர்கள் பேசுவதெல்லாம் எழுத்தாக மாறும். இதற்குச் சேகுவாரா, நெல்சன் மண்டேலா, பிரபாகரன் போன்றோரை எடுத்துக்காட்டாகக் கூறலாம். பிறப்பின் அடிப்படையில் கல்வி மறுக்கப்பட்ட நாட்டில் அடிப்படை உரிமைகளுக்காகப் பாடுபடுபவர்கள் எல்லாம் எழுத்தாளர்களாக ஆவது திண்ணம். பண்டிதர் அயோத்திதாசர், இரட்டைமலை சீனிவாசன், தந்தை பெரியார், மகாத்மா காந்தி, ஜவஹர்லால் நேரு, டாக்டர்*

அம்பேத்கர், முகமதலி ஜின்னா, அறிஞர் அண்ணா போன்றோர் இதற்கு எடுத்துக்காட்டு. நிலையற்ற மனித வாழ்வில் நிலையான அறம் குறித்து எழுதியதால் திருவள்ளுவர் நிலைத்து நிற்கிறார். தமிழ் இலக்கியங்களால் தமிழும், நாமும் பெருமை கொள்கிறோம். இதுவன்றி வரலாறு, சமுதாயம், சமயங்கள், அறிவியல் என்றெல்லாம் எண்ணற்ற எழுத்தாளர்கள் எழுதியுள்ளார்கள். இவையெல்லாம் பெருமைக்குள்ளான விடயங்கள் தான்.

காலம் தோறும் இயல்புக்கு எதிரானதாக எழுதும் எழுத்தாளர்களும் இருந்திருக்கிறார்கள். பிற மொழி மோகம் கொண்டு தமிழை இழித்தும், பழித்தும் எழுதிய தமிழ்ப் புலவர்களும் இருந்திருக்கிறார்கள். அவர்களைப் போன்றவர்கள் தற்போதைய சூழலில் அதிகமாக எழுதுகிறார்கள். இந்தச் சூழலில் எழுத்தாளர் என்பவன் பழம்பெருமையை இழந்து விட்டான் என்று தான் கூற முடியும். இன்றைய ஊடகச் சூழலில் கொள்கை வழி ஒழுகும் எழுத்தாளன் இரப்போனாகத்தான் வாழ முடியும்.

**கேள்வி: கல்வியில் தமிழ்நாடு முன்னேறிய மாநிலமாகச் சொல்கிறார்கள். அதே போல தமிழ் மொழி வளர்ச்சியில் தமிழ்நாடு முன்னேற்றம் அடைந்துள்ளதா?**

**பதில்:** படிப்படியாகத் தமிழ்நாடு கல்வியில் முன்னேற்றம் அடைந்து வருகிறது. இன்னும் முன்னேற வேண்டும்தான். முழு அளவை எட்ட வேண்டுமெனில் கல்வியை அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது, கல்வி தனியார் மயத்திலிருந்து வெளிவர வேண்டும். கல்வியைப் பொறுத்து, எந்த அரசியலும் தலையிடா வண்ணம், மாநில வளர்ச்சி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட வேண்டும் என்பதெல்லாம் சமூகநீதிக் காதலர்களின் எதிர்பார்ப்பாகவே இருக்கும். தமிழ் மொழி வளர்ச்சியில் அக்கறை கொண்டுள்ளதாக ஆட்சியில் இருந்த திராவிட இயக்கங்கள் கூறி இருக்கின்றன. ஆனால் நடைமுறையில் குறிப்பிடத்தக்க வளர்ச்சி என்பது கேள்விக் குறியே. தற்போதைய ஒன்றிய அரசின் கல்வித் திட்டங்களால் மாநிலங்கள் தங்கள் மாநில நலன் சார்ந்து செயல்பட முடியாமல் போகிறது.

மாநிலங்களுக்குக் கல்வியில் போதிய உரிமைகள் இல்லை என்பதும் அப்பட்டமாகத் தெரிகிறது. அதனால் மாநில மொழிகள் கல்வி வளர்ச்சியில் பெரிதும் பாதிக்கப்பட்டு வருவது கண்கூடு. இதனால் பாதிக்கப்படுகின்ற மாநிலங்கள் ஒன்று சேர்ந்து போராடித்தான் தீர வேண்டும். இவை எல்லாவற்றையும் மீறி, மற்ற திராவிட மொழி பேசும் மாநிலங்களில் அந்தந்த மாநில மொழிகளுக்கு உள்ள கல்வி, அலுவல் உரிமைகள் கூட தமிழ்நாட்டில் தமிழ் மொழிக்கு இல்லை என்பதும், தமிழ் இங்கு பயிற்று மொழியாக முழு அளவில் பின்பற்றப்படாததும் வருத்தம் அளிக்கிறது

**கேள்வி: தற்போது ஆங்கில வழிக் கல்விதான் அதிகமாக உள்ளது. மக்களின் மோகமும் அதில்தான் உள்ளது. அயல்நாட்டு வேலை அவசியமாகவும், எளிதாகவும் ஆகி விட்டது. தமிழ் நாட்டின் எதிர்காலத்திற்கு இது நல்லதா?**

***பதில்:*** *அரசாங்கத்தின் கல்விக் கொள்கை சரியாக இருந்தால் மக்களை அவ்வழியில் நடத்தலாம். தமிழ்நாட்டின் இரு மொழிக் கொள்கை என்பது அறிஞர் அண்ணா முதலமைச்சராக இருந்தபோது சட்டமாகவே ஏற்படுத்தப்பட்டது. இன்றைக்குத் தமிழ் மட்டுமே ஆட்சி மொழியாக இருந்திருக்க வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள். அப்படியானால் தொடர்பு மொழி எதுவாக இருக்கும்?*




*ஆங்கிலம் நமக்கு இணைப்பு மொழியில்லை என்றால் இந்திதானே அந்த இடத்தைப் பிடிக்கும். ஆகையால் தமிழ், ஆங்கிலம் என்று இரு மொழிக் கொள்கை மிகச் சரியானதுதான். எதிர்காலத்தைச் சரியாகக் கணித்துதான் அறிஞர் அண்ணா அந்த சட்டத்தை உருவாக்கி இருக்கிறார். அதனால்தான் ஆங்கிலம் கற்று தமிழ்நாட்டைச் சேர்ந்த பலரும் வெளிநாடுகளுக்குச் சென்று பொருளீட்ட முடிகிறது. 1970களில் இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி அதிகம் பயனடைந்தவர்கள் தமிழ்நாட்டுப் பார்ப்பனர்களே. அதற்குப் பிறகுதான் பிற வகுப்பினரும் கல்வி கற்று வெளிநாடு சென்றனர். மேற்கு வங்கத்தைச் சேர்ந்த கல்வியாளர்கள், ஆங்கிலக் கல்வியைத் தங்களுக்குக் கிடைத்த வரம் என்கிறார்கள். அதற்கு வழிகாட்டியது தமிழ்நாடு தான் என்றும் புகழ்கிறார்கள். இது குறித்துக் கோர்கோ சாட்டர்ஜி என்னும் வங்காளி "உனது பேரரசும் எனது மக்களும்" என்ற தலைப்பில் ஒரு நூலே எழுதி இருக்கிறார். தமிழ்நாட்டில் நடந்த இந்தி எதிர்ப்புப் போராட்டம் தான் இந்தியாவில் இந்தி ஆட்சி மொழியாவதைத் தடுத்து நிறுத்தியது என்று அந்நூலில் அவர் விவரித்து இருக்கிறார். இந்தியாவில் ஆங்கிலம் கற்றுப் பன்னாட்டுத் தொடர்புடைய மாநிலங்களாக தமிழ்நாடும், மேற்குவங்கமும் இருக்கின்றன. இந்த மாநிலங்களில் ஆங்கிலம் பயின்றாலும் தமிழும், வங்கமொழியும் கட்டாயப் பாடமாக இருக்க வேண்டும். அது இல்லையென்றால் அது அரசின் குறைபாடே. மக்கள் எப்போதுமே தன்னல விரும்பிகள் தான். வெளிநாடு செல்லும்*

*தமிழர்களாவது தங்கள் மொழியையும், பண்பாட்டையும் காக்க உறுதி கொள்ள வேண்டும். தங்கள் தலைமுறைகளுக்கும் அதைக் கடத்த வேண்டும்.*

***கேள்வி: தற்போது கலாச்சார மாற்றங்களும் அதிக அளவில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அந்நிய மோகம், பண்பாட்டை மீறிச் செல்லும் பொழுதுபோக்குச் சூழ்நிலைகள், ஊடகங்களின் பாதிப்பு இதுபோன்று மாறிவரும் சூழலில் தமிழ் மொழி எந்த வகையில் தன்னைத் தகவமைத்துக் கொள்ளும்?***

***பதில்:*** *வரலாற்றில் பண்பாட்டு மாற்றங்கள் நிறையவே நிகழ்ந்திருக்கின்றன. இந்தியாவைப் பொறுத்து, பண்பாட்டு மாற்றங்களில் சமயங்களே அதிகப் பங்கு வகிக்கின்றன. 56 நாடுகளாக இருந்து இந்தியா என்னும் ஒற்றை நாடாக மாறிய சூழலும், அதன் வழி, பண்பாட்டுச் சிதைவுகளும், மிகப் பரந்த அளவில் பேசப்பட்ட தமிழ் மொழியைச் சிறிது சிறிதாகக் குறைத்துக் கொண்டே வந்து இன்றைக்குத் தமிழ்நாடு என்ற அளவில் நிறுத்தி இருக்கின்றன. இது இன்னும் சிதைவடையக் கூடும். நாம் அறுபதுகளில் பார்த்த கிராம, நகரச் சூழ்நிலைகள் எப்படிப் பெருமளவில் மாறியிருக்கிறதோ அது போலத்தான் இதுவும். இதை யார் தவிர்க்க முடியும்? தடுக்க முடியும்? அந்தந்தக் காலத்தில் ஒரு புலவனோ, மன்னனோ, தலைவனோ தோன்றி மொழிக்கும், பண்பாட்டிற்கும் அளிக்கின்ற உயர்வும், தொடர் பணிகளும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அவற்றை ஏற்றம் பெற வைக்கும். சமயங்களும் இப்படித்தான். புத்தர் மறைந்து இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர், புத்தமதம் உலகெங்கும் பரவியதற்கு அசோக மன்னர் என்கிற தனிமனிதரே காரணம் என்பது வரலாறு. அப்படி அதிகாரத்தில் இருப்பவர்கள் நினைத்துச் செயல்பட்டால் கூட, காலச் சூழலும் ஒத்திசைவாக இருக்க வேண்டும். எல்லாத் தகுதிகளும், திறமைகளும் பல நூறு பேர்களுக்கு இருக்கக்கூடும். ஆனால் அதிகாரம் உடைய தலைமைப் பண்புக்கு ஒரு சிலர்தான் செல்லுகின்ற வாய்ப்பு அமையும். 'அமையும்' என்பதில், தன் திறமையும் உண்டு; வாய்ப்பாக வரும் தனித்தனி ஏற்றங்களும் உண்டு. தொடர்ந்து பன்னெடுங்காலம் எந்த முன்னேற்றமும் இல்லாத காலமும் வரலாறில் இருந்திருக்கிறது. இந்த நிகழ்வுகள் தான் ஏற்பட வேண்டும் என்று யாரும் விரும்பலாம். ஆனால் செயலாக்கம் நம் விருப்பம் மட்டுமே சார்ந்ததில்லை! தமிழ் மொழியைப் பொறுத்த வரையில் அளப்பரிய இலக்கியச் செல்வங்களைக் கொண்டிருக்கும் ஒரு மொழி. உலகின் மிகப் பழமையான மொழி. அதனால் தமிழ் மொழி அழியாது என்று நம்மில் பெரும்பாலோர் சொல்லிக் கொண்டிருக்கிறோம். அது நம் தாய்மொழி என்பதால் அந்தப் பாசம் இருக்கக்கூடும். அதையும் மீறிய ஒரு பிடிப்பு தமிழ் மேல் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் நாம் வாழும் காலத்தைத் தாண்டி இதுதான் நடக்கும் என்று நாம் சொல்வதில் பெரிய உண்மைகள் ஏதும் இருப்பதற்கு வாய்ப்பில்லை.*

***கேள்வி: பேச்சு வழக்கினில் இருக்கும் மொழிக் கலப்பு தற்போது எழுத்திலும் கலந்து வருகிறது. இதனால் தமிழின் தனித்தன்மை, தூய்மை பாதிக்கப்படுமா? பிறமொழிக் கலப்பு விரும்பத்தக்கதா?***

***பதில்:*** *மொழிக் கலப்பு குறித்தும், தமிழில் பிறமொழி கலக்கும்போது அதை எப்படித் தமிழ் மொழிக்கு ஏற்றவாறு மாற்றிக் கொள்வது என்பது குறித்தும் தொல்காப்பியர் காலத்திலிருந்தே நமக்கு விதிமுறைகள் இருக்கின்றன (வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே - தொல். சொல். 884). அவற்றைக் கடைப்பிடித்து இருபதாம் நூற்றாண்டு வரை (இடையே மணிப்பிரவாளங்கள் கோலோச்சினாலுங் கூட) தமிழ் வளர்ந்து வந்திருக்கிறது. தற்போது, பேச்சு வழக்கில் உள்ளது போலவே எழுத்து வழக்கிலும் மொழிக் கலப்பு அதிக அளவில் ஏற்பட்டு வருகிறது. முன்பெல்லாம் வடமொழி எழுத்துகளே மொழிக் கலப்பாகக் கருதப்பட்டன. தற்போது ஆங்கில மொழிக் கலப்பு தமிழில் அதிகமாகக் காணப்படுகிறது. அதை ஒரு நவீனப் போக்காக (ஃபேஷனாக) நினைத்து எழுதும் போக்கு, குறிப்பாக இன்றைய தலைமுறை எழுத்தாளர்கள், சிறுகதை, நவீனங்கள், பின் நவீனத்துவம் எழுதுபவர்களின் புதிய பரிணாமமாக அது ஆகிவிட்டது. அப்படி எழுதுவதுதான் நடைமுறை மதிப்பாக, எழுதப்படாத விதியாக ஆக்கப்பட்டு விட்டது. இதனால் மொழியின் தனித்தன்மை, தூய்மை பாதிக்கப்படுகிறது என்பது உண்மைதான். ஆனால் அப்படி எழுதுபவர்களைப் பொறுத்தவரை அதுவும் மொழி வளர்ச்சி என்று சாதிக்கிறார்கள்.*

***கேள்வி: 'ஒன் இந்தியா' - ஒரு நாடு, ஒரு கொள்கை பற்றி உங்கள் கருத்து என்ன?***

***பதில்:*** *ஆயிரத்தில் ஒருவன் என்ற திரைப்படத்தில், எம்ஜிஆர் ஒரு மன்னரைப் பார்த்து, "உன் அதிகாரம் என்ன சிலப்பதிகாரமா என்றென்றும் நிலைத்து நிற்பதற்கு?" என்று கேட்பார். மன்னரை எதிர்த்துக் கேள்வி கேட்கும் அந்தப் புரட்சி வசனங்களுக்காக நானும் கைதட்டி இருக்கிறேன். நிலைத்த அதிகாரம் இருந்து, நீண்ட காலச் செயல்திட்டமாக நடந்தால் இது சாத்தியம் தான். ஆனால் அந்தக் காலத்தை எட்டுவதற்குள் பெரும் சிதைவுகளும், மாற்றங்களும் தானாகவே ஏற்பட்டு விடும். பல நாடுகளாக இருந்த இந்தியப் பகுதிகள் தான் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் ஒரே இந்தியாவாக நீண்ட நாள் திட்டப்படி கொண்டுவரப்பட்டது. ஆனால், அந்தப் பிரிட்டிஷ் இந்தியாவில் இன்று பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், பங்களாதேஷ் போன்றவை இல்லையே. விடுதலை பெற்ற இந்தியப் பாராளுமன்றத்தில் "இந்திய ஒரு நாடு அல்ல; அது ஒரு துணைக்கண்டம்" என்று அண்ணா பேசினார். யாரும் எதிர்வாதம் எழுப்பவில்லையே! பூகோள அமைப்பின்படி ஏழு பெரிய கண்டங்கள் இருக்க, இந்தியா ஒரு கண்டத் திட்டிலிருந்து, தீவாகப் பிரிந்து, டெத்தீஸ் என்ற கடல் வழி இடம்பெயர்ந்து, ஆசியக் கண்டத்தில் வந்து மோதி, தீபகற்பமாக மாறிய ஒரு*

துணைக் கண்டம்தான். இது இன்றைய அறிவியல் ஏற்றுக் கொண்ட 'பாஞ்சியா' என்று அழைக்கப்படும் கோட்பாடு *(Pangaea Theory)*. வரலாறின் படியும் வடமேற்கு வழி நுழைந்தவர்கள், நாவாய் வழி வந்தவர்கள் எண்ணப்படி இந்தியப் பகுதிகள் துண்டு துண்டாகவும், சேர்த்தும் ஆளப்பட்டு வந்திருக்கிறது. இந்தியா துணைக் கண்டம் என்பதை அரசியல் ரீதியாக அணுகும் போது வடநாடு தென்னாடு; திராவிடம் ஆரியம் என்ற புள்ளியில் போய் நிற்கும். இப்போது அதை ஒரே நாடு, ஒரே கொள்கை என்று வலுக்கட்டாயமாக இணைத்தாலும் உள்ளுக்குள் பிரிவினை புகைந்து கொண்டே இருக்கும். என்றாவது ஒரு நாள் ஜல்லிக்கட்டு போராட்டம் போல் மக்கள் எழுச்சியாகவும் மாறும்.

***கேள்வி: சமகால அரசியலில் இளைஞர்களின் பங்கு என்னவாக உள்ளது? எப்படி இருக்க வேண்டும்?***

***பதில்:*** அபாயகரமாக உள்ளது. நிறைய மாற வேண்டும். இன்றைய இளைஞர்களின் இப்படிப்பட்ட போக்குகளுக்கான அடிப்படை 1980களில் நிகழ்ந்ததாக என் அனுபவத்தில் உணர்கிறேன். அப்போது கலைஞரையும், எம்ஜிஆரையும் தவிர வேறு தலைவர்களைப் பெரும்பாலும் யாருக்கும் தெரியாது. வருங்காலத் தலைமுறையினரை வளைத்து, கூடவே அழைத்துச் செல்லும் பண்பை மறந்து, தங்களுக்கு இடையேயான பிரச்சினைகளை மையப்படுத்தி அவர்கள் அரசியல் செய்தார்கள். அதன் விளைவு, எண்பதுகளின் இளைஞர்கள் முழுக்க முழுக்க நடிகர்களின் குஞ்சுகளாக மாறிப் போனார்கள். நடிகைகளுக்குக் கோயில் கட்டும் அளவிற்குத் தரமிழந்தார்கள். சிறிது காலத்தில் எம்ஜிஆர் இறந்து போனதும், கலைஞர் - ஜெயலலிதா அரசியல் மக்கள் எல்லோரையும் அரசியலின் பால் வெறுப்புக் கொள்ள வைத்துவிட்டது. கலைஞர் முதலமைச்சராக இருந்த காலத்தில் அவர் தமிழ், தமிழ்நாட்டு முன்னேற்றத்திற்கு நிறையவே நல்ல திட்டங்களைச் செயல்படுத்தி இருக்கிறார். அவர் அளவுக்கு தமிழ்நாட்டில் வேறு யாரும் இத்தனைச் சாதனைகள் புரிந்ததில்லை என்று உறுதியாகக் கூறலாம். அதேநேரம், அவர் அரவணைத்துச் செல்லும் தலைவராக இருந்திருந்தால், அவருடைய காலம் வரை அவரே முதலமைச்சராக நீடித்து இருந்திருப்பார். ஆனால் எந்த அடிப்படையில் அவர் வந்தாரோ அந்த இயக்கம் பிளவு பட்டு, மற்றவர்கள் ஆட்சி அமைக்கவும் அவரே காரணம் ஆகிவிட்டார். திராவிட இயக்கம் இதுநாள் வரை எதற்காகப் போரிட்டு வந்ததோ, அதற்கு நேரெதிரியான பார்ப்பன இனத்தையே சேர்ந்த ஒருவர் முதலமைச்சரானதும் கலைஞரின் கைங்கரியம் தான். அந்த எண்பதுகளில் வாழ்ந்த இளைஞர்கள் பெற்றார்களாகி அவர்களின் அடுத்த வாரிசுகளான இன்றைய இளைஞர்கள், நடிகர்களின் கட் அவுட்டுக்குப் பாலூற்றிக் கொண்டிருக்கிறார்கள். இது கடவுள் சிலைகளுக்குப் பால் ஊற்றுவதை விடவும் மூடநம்பிக்கையானது. அன்றைய அரசியல்வாதிகளாலும், பெற்றோர்களாலும்

சரியாக வழி நடத்தப்படாத நிலையால் இன்றைய இளைஞர்களின் சமகாலப் போக்கில் மொழி, பண்பாடு, தமிழ்நாடு என்ற உணர்வுகள் பெருமளவில் மாறி வருவதைக் கண்கூடாகப் பார்க்க முடிகிறது. 2000 ஆவது ஆண்டுக்குப் பிறகு தான் மதவாத அரசியல் ஓரளவுக்குப் பரவலானது.

ஆனால் மதவாத அரசியலில் இளைஞர்கள் ஈர்க்கப்பட்டு, அதனால் இன்றைக்குத் தமிழ்நாட்டில் பாஜக இந்த அளவில் ஊடுருவி இருப்பதை ஆபத்தாகத்தானே பார்க்க முடியும்? ஆர். எஸ். எஸ். எப்படித் தமிழ்நாட்டின் குக்கிராமங்கள் வரை ஊடுருவ முடியும்? மதத்தோடு சாதி வெறியும் சேர்ந்து கொண்டது. இதன் விளைவாகச் சாதிப் படிநிலையில் இருப்பவர்கள் மீது மனிதாபிமான வன் கொடுமைகள் நிகழ்த்தப்படுகின்றன. இவற்றை அரசாங்கம் சரியாகக் கையாளவில்லை என்ற குற்றச்சாட்டு தவிர்க்க இயலாதது. எதிர்கால அரசியலும் மத அரசியல் என்று ஆகிவிட்டால், இந்து ராஷ்டிரம் அமைவது தவிர்க்க முடியாததாக ஆகிவிடும். மதவாத அரசியலை எதிர்த்துப் போராட, தந்தை பெரியார், அண்ணல் அம்பேத்கர் போன்ற பிரம்மாண்டமான அஸ்திரங்கள் என்னும் தத்துவக் கோட்பாடுகள் இருந்தும், அவற்றைப் பயன்படுத்தாமல் கோட்டை விட்டு விட்டோமோ என்று எண்ணத் தோன்றுகிறது. இந்தச் செய்திகளை இளைஞர்கள் மத்தியில் எப்படிக் கொண்டு போய் சேர்ப்பது என்பதுதான் இப்போது நம் முன் இருக்கும் பிரச்சனை.



**கேள்வி: மகளிர் திருமண வயது கூடி உள்ளது. இது எந்த வகையான மாற்றத்தை ஏற்படுத்தும்?**

**பதில்:** இது வரவேற்கத்தக்கது தான். ஒரு காலத்தில் குழந்தைத் திருமணம் இந்தியாவில் மிக அதிகம். திருமணம், குடும்பம் என்ற பெயரில் வயதுக்கு வராத சிறுமிகளையும் பாலியல் கொடுமைப்படுத்திய வக்கிரமங்கள் ஏராளம். 1925 ஆம் ஆண்டில் அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்த மிஸ் மேயோ என்ற பெண்மணி 'இந்திய மாதா' என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதைப் படித்தால் பல நாட்களுக்குத் தூக்கம் வராது. இந்து மதமும், பிராமணியமும் எத்தனைக் கொடுமையானவை என்பதற்கான ஒரு சிறு விளக்கமே அந்நூல். பெண்ணின் திருமண வயதை 12 ஆக நிர்ணயிக்கும் மசோதாவை, சென்னை மாகாணச் சட்டமன்றத்தில் நிறைவேற்ற விடாமல் அங்கிருந்த வைதிகப் பார்ப்பனர்கள் ஆடிய மனிதத் தன்மையற்ற பேயாட்டங்கள் குறித்து

அறிந்திருக்கும் அனைவரும் மகளிர் திருமண வயது சட்டத்தின் மூலம் ஏற்றப்பட்டிருப்பதை வரவேற்கவே செய்வார்கள். நன்கு கல்வி கற்று, தகுதியான ஒரு வேலையில் அமர்ந்த பின்னரே காதல், திருமணம் என்று பெண்கள் முடிவு எடுப்பது நல்லது என்று பள்ளிகளில் இருந்தே அவர்களுக்குக் கற்றுத் தர வேண்டும். இதை ஆசிரியர்கள் தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்லுவதைப் போல கற்றுக் கொடுத்தல் நல்ல பயனைத் தரும்.



***கேள்வி: பிள்ளைகள், உறவினர்கள் தமிழ்ப் பணியில் உள்ளனரா? எப்படி ஆர்வம் வந்தது?***

***பதில்:*** இந்தத் தலைமுறைக்குத் தமிழில் அவ்வளவாக ஆர்வம் இல்லை. ஏதோ நம் வற்புறுத்தலால் சற்றுத் தயங்கி நின்று பார்க்கிறார்கள். மற்றபடி இன்றைய மத்திய, மாநில அரசாங்கங்களின் கல்விக் கொள்கைகளும், திட்டங்களும், பள்ளிகள் இயங்கும் முறையும், சாதி மதங்களைப் பொறுத்து நிலவும் சமூக மாற்றங்களும் பெருமளவில் தமிழ்க் கல்வியைப் பெரிதும் பாதித்துவிட்டன. இனிவரும் தலைமுறையால் தமிழ் தலை தூக்குவது என்பதெல்லாம் இருக்காது என்றே கூறலாம். ஆனால் தமிழ் ஆய்வாளர்கள் முறையான ஆய்வுகளை மேற்கொண்டு வந்தால் ஆய்வுலகம் என்ற அளவிலாவது தமிழ் நீடித்திருக்க வாய்ப்பு இருக்கிறது.

தமிழும் நானும் என்ற பகுதியில் என்னுடைய நேர்காணலையும் வெளியிடுவதற்கு மிக்க நன்றி.

*தொடர்- 4*

# தவறின்றித் தமிழ் எழுதுவோம்



**டாக்டர் புதேரி தானப்பன்**
*தலைவர், திருக்குறள் பாராயணம், புது தில்லி.*
*தலைவர், தில்லித் தமிழ் வளர்ச்சிக் கழகம், புது தில்லி.*

**புணர்ச்சி:**

*உயிரையும் மெய்யையும் ஈறாகவும் முதலாகவும் கொண்ட சொற்கள் தன்னொடு தானும் பிறிதொடு பிறிதுமாய் இணைந்து ஒரே சொற்றொடராகும் நிலையைப் புணர்ச்சி என்பர். முதலில் நிற்கும் சொல் நிலைமொழி எனப்படும். அதனுடன் வந்து இணையும் சொல் வருமொழி எனப்படும். நிலைமொழி, வருமொழி இவற்றின் ஈற்றிலும் முதலிலும் வருகின்ற எழுத்துகளின் அடிப்படையில் புணர்ச்சி விதிகளையும் விதிவிலக்குகளையும் நமது முன்னோர் வகுத்துள்ளனர்.*

*சொற்களின் அடிப்படையில் நிலைமொழியும் வருமொழியும் இணைந்து ஒரு சொற்றொடராக மாறுவதைக் கவனித்துப் பார்க்கலாம்.*

*பெயர்+பெயர்*
*வெள்ளை + புறா = வெள்ளைப்புறா*
*மல்லிகை + பூ = மல்லிகைப்பூ*
*மரம் + குதிரை = மரக்குதிரை*
*ஆறு + குளம் = ஆறுகுளம்*
*பணம் + பை = பணப்பை*
*பட்டு + கன்னம் = பட்டுக்கன்னம்*

*பெயரும் பெயரும் இணையும்போது அது ஏதேனும் ஒரு தொகையாக மாறும்.*

*வெள்ளை, மல்லிகை, மரம், பணம், பட்டு ஆகியவை யாவும் பெயர்ச் சொற்கள்.*

*புறா, பூ, குதிரை, குளம், பை, கன்னம் ஆகியவையும் பெயர்ச் சொற்கள். பெயர்ச் சொற்களும் பெயர்ச் சொற்களும் இணைந்து தொகைச் சொற்களாக மாறின.*

*வினை + வினை*
*உண்டான் + மகிழ்ந்தான் = உண்டு மகிழ்ந்தான்.*
*பார்த்தாள் + பேசினாள் = பார்த்துப்பேசினாள்*
*எடு + கொடு = எடுத்துக்கொடு*
*பார் + பேசு = பார்த்துப்பேசு*

வினையும் வினையும் இணையும்போது நிலைமொழி வினை, வினையெச்சமாக மாறும்.

உண்டு, பார்த்து, எடுத்து ஆகியவை வினையெச்சச் சொற்கள்.

**பெயர் + வினை**

தனிப் பெயருடன் (தொகையல்லாத பெயர்) வினை இணையாது.

உயிரீற்றுப் பெயருடன் உயிர்முதல் வினை வந்தால் உடம்படு மெய்யுடன் இணையும்.

மாதவி + ஆடினாள் = மாதவியாடினாள்.




வேண்டுமாயின் கண்ணன் + உண்டான் என்பதைக் கண்ணனுண்டான் என எழுதலாம். அது பண்டித நடையாகும்.

மாதவி என்பது உயரீற்றுப் பெயர்ச் சொல். ஆடினாள் என்பது வினைச்சொல்.

**வினை+பெயர்**

கொல்+யானை=கொல்யானை

கடி+நாய்=கடிநாய்

ஏவல்வினையுடன் பெயர் இணையும்போது அது வினைத்தொகை ஆகலாம்.

கொல் என்பதும் கடி என்பதும் ஏவல் வினை ஆகும். யானை என்பதும் நாய் என்பதும் பெயர்ச் சொற்கள்.

வினைமுற்றின் பின் பெயரை இணைத்து எழுதுவது தமிழ் நடை அல்ல; அதனைச் செய்யுள் வழக்கு எனலாம்.

வந்தான் கண்ணன்.

ஆடினாள் மங்கை .

வந்தான், ஆடினாள் என்பவை வினைமுற்றுகள்.

இக்கருத்துகளின் அடிப்படையிலேயே

தன்னொடு தான் புணரும் இடங்களில் மட்டுமே ஒற்றுமிகும், தன்னொடு பிறிது புணருமிடத்தில் ஒற்று மிகாது எனும் கருத்து முன்வைக்கப்பட்டது.

***இயல்பு புணர்ச்சி: (வலி மிகா இடங்கள்)***

***1) எழுவாய்த் தொடரில் வலி மிகாது .***

*மழை + பெய்தது = மழை பெய்தது*

*என்று இயல்பாகவே புணரும் . ஏனெனில் இது ஓர் எழுவாய்த் தொடராகும். எழுவாய்த் தொடரில் வலி மிகாது . வேற்றுமை உருபு ஏற்காமல் வருவது எழுவாய்த் தொடராகும் .*

***2) பெயரெச்சத்தில் வலி மிகாது***

*திரிந்த + காலம் = திரிந்த காலம்*

*என்று இயல்பாகவே புணரும் . பெயரெச்சத்தில் வலி மிகாது . திரிந்த காலம் பெயரெச்சமாதலால் வலி மிகவில்லை .*

***3) மென்றொடர்க் குற்றியலுகர ஈற்று வினையெச்சத்தின் பின் வலி மிகாது .***

*கண்டு + திரும்பினான் = கண்டு திரும்பினான் .*

*கண்டு -- மென்றொடர்க் குற்றியலுகர ஈறு உள்ள எச்ச வினை .*

***4) வினைத்தொகையில் வலி மிகாது .***

*நிறை + குடம் = நிறை குடம் .*

*நிறைகுடம் வினைத்தொகையாகும். வினைத்தொகை காலம் காட்டாது. எனினும் இதை நிறைந்த குடம் , நிறைகின்ற குடம் , நிறையும் குடம் என்று முக்காலத்திற்கும் விரிக்கலாம்.*

***5) இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வலி மிகாது.*** *தொக்கி நிற்பது தொகை. தொக்கி என்றால் மறைந்து என்று பொருள்.*

*வீடு + கட்டினான் = வீடு கட்டினான் .*

*ஒற்று மிகாது . ஏனெனில் இதில் இரண்டாம் வேற்றுமை உருபு தொக்கி உள்ளது . விரியவில்லை . ஆனால் இரண்டாம் வேற்றுமை உருபான 'ஐ' என்பது விரிந்து, வீட்டை + கட்டினான் என்று வந்தால் அங்கே ஒற்று மிகுந்து, வீட்டைக் கட்டினான் என்று வரும்.*

***6) உகர ஈற்று வினையெச்சத்தின் பின் வலி மிகாது.***

*செய்து + பார் = செய்து பார். இங்கே வலி மிகவில்லை. செய்து என்னும் சொல்லில் உள்ள 'து' என்பது த் + உ = ஆகும். எனவே 'து' என்பது உகர ஈறு ஆகும்.*

செய்து என்னும் சொல் வினை எச்சம் ஆகும். ஒரு சொல் முடியாமல் நிற்பது எச்சம் எனப்படும்.

***7) நிலைமொழி ஈறு கெடவில்லையெனில் வலி மிகாது.***

*பாடாத + பைங்கிளி = பாடாத பைங்கிளி*

*நிலைமொழி ஈறு கெடவில்லை . அதனால் இங்கே ஒற்று மிகாது. பாடாத என்பதற்கு மாறாகப் பாடா என்று வந்தால் அது ஈறு கெட்டது ஆகும். ஏனென்றால் பாடாத என்னும் சொல்லில் உள்ள ஈற்றெழுத்து, அதாவது, கடைசி எழுத்து கெட்டு விட்டது; அழிந்து விட்டது; நீங்கி விட்டது; வராமல் போய்விட்டது என்று பொருள்.*

***8) அது, இது ,உது ஆகிய சுட்டுப் பெயர்களுக்குப்பின் வலி மிகாது.***

*அது + பறவை = அது பறவை .*

*இது + வீடு = இது வீடு*

***9) மென்றொடர்க் குற்றியலுகரத்தின் முன் வினைச்சொல் வந்தால் ஒற்று மிகாது.***

*குரங்கு + பாாத்தது = குரங்கு பார்த்தது .*

***10) உயர்திணையில் ஒற்று மிகாது.***

*மகளிர் + குழு = மகளிர் குழு*

*ஒற்று மிகாது . மகளிர் உயர்திணை . எனவே ஒற்று மிகாது .*

***11) விளி வேற்றுமையில் ஒற்று மிகாது.***

*மகனே + கேள் = மகனே கேள் .*

*ஒற்று மிகாது . எட்டாம் வேற்றுமையான விளி வேற்றுமையில் ஒற்று மிகாது .*

***12) உம்மைத் தொகையில் ஒற்று மிகாது.***

*வெற்றிலை + பாக்கு = வெற்றிலை பாக்கு*

*இது இயல்பாகவே புணரும். ஏனெனில் வெற்றிலை பாக்கு என்பது உம்மைத்தொகை. இதை வெற்றிலையும் பாக்கும் என்று விாிக்கலாம்.*

***13) வன்தொடர் ஒழிந்த ஏனைய குற்றியலுகரங்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*ஆறு + தலை = ஆறு தலை.*

*விறகு + பெரிது = விறகு பெரிது.*

*எஃகு + சிறிது = எஃகு சிறிது.*

*பந்து + தந்தான் = பந்து தந்தான்.*

*செய்து + போனான் = செய்து போனான்.*

***14) சுட்டுப் பெயர்களுடன் புணரும் வல்லினம் மிகா.***

*அது+ காண் = அது காண்.*

*இது + காண் = இது காண்.*

***15) வினாப் பெயர்களுடன் புணரும் வல்லினம் மிகா.***

*எது + படித்தாய் = எது படித்தாய்.*

*ஏன் + கண்டாய் = ஏன் கண்டாய்*

*யார் + சென்றது = யார் சென்றது*

***16) முதல் வேற்றுமையில் புணர்ந்து நிற்கும் வல்லினம் மிகா.***

*புலி+ பார்த்தது= புலி பார்த்தது.*

*புலி என்பது எழுவாய்த் தொடர். இது முதல் வேற்றுமை.*

***17) மூன்றாம் வேற்றுமை விரியில் வல்லினம் மிகாது.***

*என்னோடு + வந்த = என்னோடு வந்த. ஆல், ஆன், ஒடு, ஓடு ஆகியவை மூன்றாம் வேற்றுமை உருபுகள் ஆகும்.*

***18) ஆறாம் வேற்றுமை விரியில் வல்லினம் மிகாது.***

*எனது + கை = எனது கை. ஆறாம் வேற்றுமை உருபு: அது.*

***19) விளித் தொடர்களில் புணரும்போது வல்லினம் மிகாது.***

*தம்பி + கேள் = தம்பி கேள். ஏழாம் வேற்றுமை: விளி வேற்றுமை. விளித்தல் = அழைத்தல், கூப்பிடுதல்.*

***20) பெயரெச்சத்துடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*பார்த்த + குதிரை = பார்த்த குதிரை. பெயரைக் கொண்டு முடிவது பெயரெச்சம். குதிரை - பெயர்ச்சொல்.*

***21) படி என்று முடியும் வினையெச்சங்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*சொன்னபடி + செய்தான் = சொன்னபடி செய்தான். வினையைக் கொண்டு முடிவது வினையெச்சம். செய்தான் - வினைச்சொல். வினை = தொழில்.*

***22) அகர ஈற்று வினை முற்றுக்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*ஒடிந்தன + சிறகுகள் = ஒடிந்தன சிறகுகள். ஒடிந்தன - அகரத்தை ஈற்றில் உடைய சொல்.*

***23) வியங்கோள் வினை முற்றுக்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*வாழ்க + தமிழகம் = வாழ்க தமிழகம். வாழ்க - வியங்கோள் வினை முற்று.*

***24) அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு என்னும் சொற்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*அவ்வளவு + கொடுத்தாய் = அவ்வளவு கொடுத்தாய்.*

*இவ்வளவு + பாடல்களா = இவ்வளவு பாடல்களா?*

*எவ்வளவு + சோறு = எவ்வளவு சோறு.*

***25) ஆ, ஓ, ஏ என்னும் ஈறுகளையுடைய வினாப் பெயர்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*அவனா + தந்தான் = அவனா தந்தான்?*

*இவனோ+ செய்தான் = இவனோ செய்தான்?*

*அவனே + கண்டான் = அவனே கண்டான்.*

*அவனா, இவனோ, அவனே ஆகியவை ஆ, ஓ, ஏ என்னும் ஈறுகளை உடைய வினாப் பெயர்கள்.*

***26) எண்ணுப் பெயர்களுடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*ஒன்று + கொடு = ஒன்று கொடு.*

*இரண்டு + குரங்குகள் = இரண்டு குரங்குகள்.*

*மூன்று+ பொம்மைகள் = மூன்று பொம்மைகள்.*

***27) அகர ஈற்று அஃறிணைப் பன்மைப் பெயருடன் புணரும்போது வல்லினம் மிகாது.***

*சில + குதிரைகள் = சில குதிரைகள்.*

*பல + தலைகள் = பல தலைகள்.*

*சில, பல என்பவை அகர ஈற்றுச் சொற்கள். குதிரைகள், தலைகள் என்பவை அஃறிணைப் பன்மைப் பெயர்கள்.*

*(முனைவர் இராஜகோப்பால் அவர்கள், தான் முகநூலில் படித்ததை எனக்கு அனுப்பி வைத்தார். அதனை அப்படியே உங்கள் பார்வைக்கு வைக்கிறேன்.)*

*'வலி' மிகும்! (ஓர் உரையாடல்)*

*வலி (வல்லொற்று) மிகும் இடங்கள், மிகா இடங்கள் குறித்த ஐயப்பாடுகள் பலருக்கும் உண்டு. இலக்கண விதிகளைக் கரைத்துக்குடித்த பேராசிரியர்கள் தவிர பலருக்கும் (ஆசிரியர்கள் உட்பட) ஐயம்தான். இதற்கான விதிகள் சுருக்கமாகவும் தெளிவாகவும் இல்லாததே காரணம் எனலாம்.*

*இனி, ஆசிரியர்-மாணவர் இடையேயான ஓர் உரையாடல்:*

*ஆ: வினையெச்சத்தின் பின் வல்லொற்று மிகும்..... எடுத்துக்காட்டு 'கடித்துத்தின்றான்'.*

*மா: அப்படியானால் 'இடிந்துப்போனது' என்று எழுதுவதில்லையே.. இடிந்துபோனது என்றுதானே எழுதுகிறோம்.*

*ஆ: வினையெச்சம் மென்தொடர் குற்றியலுகரமானால் மிகாது.*

*மா: அங்குச்சென்றான், ஈண்டுப் போகிறோம் என்பனவற்றில் அங்கு, ஈண்டு மென்தொடர் குற்றியலுகரம் தானே. மிகுகிறதே?*

*ஆ: அவை 'வினையடைகள்'. வினையடைகளில் மிகும்.*

*மா: பங்குத்தந்தை, பங்குச்சந்தை ஆகியவற்றில் வரும் ' பங்கு' வினையடை அல்லவே. மிகுகிறதே!*

*ஆ: பங்குத்தந்தை... தொகைச்சொல். தொகையில் மிகும்.*

*மா: சங்கு சக்கரம் தொகைதானே (உம்மைத்தொகை). சங்குச்சக்கரம் என மிகவில்லையே!*

*ஆ: உம்மைத்தொகையில் மிகாது.*

*மா: ஐயா... போதும்! இன்னும் ஐயப்பட்டால் 'வலி' மிகும்!*

# உணர்வும் உரிமையும்

**மாரிராஜன்**

*சோழர் வரலாற்று ஆய்வுச் சங்கம் - சென்னை.*



கடவுளிடம் நகைச்சுவையோடு உரையாடும் உரிமை கொண்டவர்கள் தமிழர்கள். இதற்கு கீழ்க்காணும் நிகழ்வு ஓர் எடுத்துக்காட்டு.64 வகைகள் கொண்ட சிவபெருமான் வடிவங்களில் பிச்சாடனார் வடிவமும் உண்டு. சிவன் தனது கரங்களில் திருவோடு ஏந்தி பிச்சைக்குச் செல்வது போன்ற வடிவமே பிச்சாடன மூர்த்தி.சிவனது இந்த செயலைதேவாரம் பாடிய சுந்தரர் தனக்கேயுரிய பாணியில் நகைச்சுவையோடு எடுத்துரைப்பார் உலகத்துக்கே உணவு அளிக்கும் அன்னபூரணி உமாதேவியை மனைவியாக கொண்ட நீ, பிச்சை பாத்திரம் ஏந்தி பிச்சைக்கு செல்வது நியாயமா.?

என்று பாடுவார் சுந்தரர்.



இதேபோல் ..

மாறவர்மன் சுந்தரபாண்டியனின் முதன்மை அதிகாரி ஒருவர். குருகுலராயன் என்றழைக்கப்படும் குருகுலக்கோன். இவருக்கும் சிவபெருமான் பிச்சை எடுக்கும் செயலில் உடன்பாடில்லை.

தினசரி மூன்று வேளையும் சிவபெருமானுக்கு அமுது படையல் நிகழ்வு செய்ய ஒரு நிரந்தரமான வைப்புத் தொகையை வைக்கிறார். நில தானமும் செய்கிறார்.அதன் மூலம் கிடைக்கும்வருவாயைக் கொண்டு எந்த தடையும் இல்லாமல் உணவு படையல் நடைபெற வேண்டும்.

இதன் பெயர் சந்தி என்றழைக்கப்படும்.

நிருநெல்வேலி நெல்லையப்பர் கோவில் கல்வெட்டு.நெல்லையப்பருக்கு குருகுலராயன் கொடுத்த நிவந்தம்.தனது பெயரில் சந்தி ஒன்றை ஏற்படுத்தி நெல்லையப்பருக்கு நிலதானம் வழங்குகிறார்.



த.நா.அ. தொல்லியல் துறை — தொடர் எண் : 112/2005

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | திருநெல்வேலி | ஆட்சி ஆண்டு | - |
| வட்டம் | திருநெல்வேலி | வரலாற்று ஆண்டு | கி.பி. 13ஆம் நூற்றாண்டு |
| ஊர் | திருநெல்வேலி | | |
| மொழி | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | - |
| எழுத்து | தமிழ் | முதல் பதிப்பு | - |
| அரசு | - | ஊர்க் கல்வெட்டு எண் | 22 |
| அரசன் | சுந்தரபாண்டியன் | | |

இடம் : நெல்லையப்பர் கோவில் மூன்றாம் பிரகாரம் திருச்சுற்று வடகிழக்கு மூலை நூற்றுக்கால் மண்டபத்தூண் மேற்குத் தூண் கிழக்குப் பக்கம்.

குறிப்புரை : குருகுலத்தரையன் தன் பெயரில் சந்தி ஏற்படுத்தியதைத் தெரிவிக்கும் பாடல் கல்வெட்டு

கல்வெட்டு :

1. ஓங்கும் பெரும் புகட் சிற்றூர்
2. மனுய்ய நின்றாடி யொண்பா
3. ர். தாங்கும் புயத்துக் குருகுலக
4. கோன் பெயர்ச்சந்தி நட்டி
5. த். தேங்கும் புன்றிரு நெலவே
6. லி நாதன் திருக்கரத்தில். தாங்கு
7. ங்க பாலத் திடும் பலி யேற்கை
8. யை மாற்றின னே ←.

நெல்வேலி நாதா ,

உனது உணவு தேவைக்கு நிலம் வழங்கிவிட்டேன். வருமானத்தை வச்சுக்கோ.. சாப்பிட்டுக்கோ.. பிச்சைக்கு செல்லாதே.. என்று கூறி பிச்சை எடுக்கும் சிவனின் தொழிலையே மாற்றிவிட்டாராம்.

அழகான செந்தமிழ் பாவில் அமைந்தக் கல்வெட்டு.

"ஓங்கும் பெரும்புகட் சிற்றூர் மனுய்ய நின்றாடியொண்பார்
தாங்கும் புயத்து குருகுலக்கோன் பெயர்ச்சந்தி நாட்டித்
தேங்கும் புன்ற்றிரு நெல்வேலிநாதன் திருக்கரத்தில்
தாங்கும் கபாலத்திடும் பலியேற்கையை மாற்றினனே.."

சிற்றூர் என்னு ஊரைச் சேர்ந்த குருகுலக்கோன் என்பவன் தனது பெயரால் சந்தியை ஒன்று ஏற்பாடு செய்து திருநெல்வேலி நாதன் தன் பாத்திரத்தில் பிச்சையேற்கும் தொழிலையே மாற்றிவிட்டான்..

நான்தான் இருக்கேன்ல சாமி..

நீ ஏன் பிச்சை எடுக்க போவனும்...

உணர்வோடும் உரிமையோடும் இருக்கும் வழிபாடு இது..

*வரலாற்றில் மருத்துவம் -2*

# தொல்தமிழர் கண்ட அறுவை மருத்துவம்

***அண்ணாமலை சுகுமாரன்***



*இராவணனின் சிந்தாமணி மருத்துவம்-3 பகுதியில் போல்லி எனும் ஐரோப்பியர் தமிழர் மருத்தவம் குறித்து எழுதிய ஒரு குறிப்பை தந்திருந்தேன் அதை இப்போதும் இங்கே தந்திருக்கிறேன் .*

*Folly's text clearly demonstrates this attitude. On one hand, he sees the "Malabar" (Tamil) doctors as superstitious quacks with very little knowledge of medicine and none at all of surgery, on the other, he is very eager to find the precise textual sources for their metallic drugs, possibly in order to find a better treatment for venereal diseases (particularly syphilis) இது அந்த குறிப்பின் ஒரு பகுதி.*

*இதில் அவர் அறுவை சிகிச்சை என்பது தமிழர் மருத்துவத்தில் இல்லை என்று குறிப்பிடுகிறார்.ஆனால் அது உண்மையா என்றால் மிகப்பெரிய புரிதலின்மை கொண்ட ஒரு பொய் சொல் என்பதை இப்போது காணப்போகிறோம் .*

*இன்றைய நவீன கால மருத்துவத்தில் -அறுவை சிகிச்சை என்பது தவிர்க்க முடியாத ஓர் அங்கமாகும். சாதாரண மருந்து, மாத்திரைக்குக் கட்டுப்படுத்த முடியாத பல்வேறு நோய்களுக்கும் இன்று அறுவை சிகிச்சையே பரிந்துரை செய்யப்படுகிறது. இவ்வாறு இன்றைய நவீன மருத்துவத்தின் தவிர்க்க மிடியாத அங்கமாக உள்ள அறுவை மருத்துவமானது நமது தமிழ் சித்தர்கள் உலகிற்கு தந்த ஒரு கொடை என்பதே உண்மை .*

*நமது தமிழ் சித்தர்கள் குளிகைகள், லேகியம், கியாழம், சூரணம், சாறு, குடிநீர், களி, நெய், பாகு, குழம்பு, பதங்கம், கட்டு, பற்று, ஒற்றடம், பூச்சு, வேது, புகை, தொக்கணம், ஊதல், கலிக்கம், களிம்பு போன்ற சாதாரண மருந்துகள் முதல் களங்கு, செயநீர், சுண்ணம், பஸ்பம், குரு மருந்து, சத்து, பதங்கம், மெழுகு, தீநீர் போன்ற உயர்ரக மருந்துகளின் செய்முறைகள்வரை நமக்குத் தந்தருளியுள்ளனர்.*

*அதோடு மட்டுமில்லாது அவர்கள் கீறல், அட்டை விடல், சலாகை, அறுவை, பீச்சு, குருதி வாங்கல் போன்ற அறுவை சிகிச்சை தொடர்புடைய முறைகளையும் கொடுத்துச் சென்றுள்ளனர். இக்காலத்தில் குளிரூட்டப்பட்ட அறைகளில்அறுவை சிகிச்சை நடைபெறுகிறது. ஆனால் தொல் தமிழர்கள் செய்த அறுவை சிகிச்சை அறைகள் வேப்பிலை, சாம்பிராணி, வெண்கடுகு*

*ஆகிய இலைகளைப் போட்டு, புகைமூட்டம் உண்டாக்கிய பிறகு, அறுவை சிகிச்சையில் ஈடுபடுவார்கள்.என்று தெரிகிறது .*

*சித்தர்களின் நூல்களில் அகத்தியர் இரண வைத்தியம், இரண வைத்திய சிந்தாமணி, தேரையர் கரிசல், அகத்தியர் நயனவிதி, நாகமுனிவர் நயன விதி, சத்திராயுத விதி எனும் நூல்கள் தரும் குறிப்புகள்மூலம் நமது தமிழ் மருத்துவமான சித்த மருத்துவத்தில் அறுவை முறைகளும், அத்தகைய சிகிச்சைக்கான கருவிகளும் இருந்ததை அறியலாம்.தேரையர் எனும் பெயரே தலையில் மண்டை ஓட்டை திறந்து அதில் இருந்த தேரையை அவர் எடுத்தாலே வந்ததாகக்கூறுவார்கள் .*

*தேக மிருந்தல்லோ சித்தெல்லா மாடலாம்*
*தேக மிருந்தக்கால் சேரலாம் பூரணம்*
*தேக மிருந்தக்கால் செயலெல்லாம் பார்க்கலாம்*
*தேக மிருந்தக்கால் சேரலாம் முத்தியே*

*என்று சித்தர் பாடல் கூறுகிறது. அந்த அளவிற்கு தேகத்தை வளர்ப்பதற்கு சித்தர்கள் முதன்மை அளித்தார்கள்*

*இவ்வாறு 2000 ஆண்டுகளாகவே நமது தொல் தமிழர் பண்பாடு சிறந்து விளங்கியது .தற்போதைய மருத்துவ மருத்துவத்திலும் தொல் தமிழர் பங்களிப்பு நிறைய இன்றுவரை இருந்து வருகிறது .*

*பருப்பில்லாமல் கல்யாணமா ? என்பது போல் பஞ்சு இல்லாமல் இன்றய மருத்துவம் சாத்தியமா ?*

*குத்தி குத்தி ரத்தம் எடுத்தாலும் ,சிறிய அல்லது பெரிய அறுவை சிகிச்சை எது செய்தாலும் பஞ்சு இல்லாமல் அவை சாத்தியமா ? "*

*கதுவாப் போகிய துதிவாய் எஃகமொடுபஞ்சியும் களையாப் புண்ணர்." இது (புறம் - 353) கூறும் செய்தி*

*போரில் ஏற்பட்ட புண்களின் மேல் பஞ்சு இடுமுறை பண்டைக்காலத் தமிழர்கள் உலகிற்குக் கற்றுக்கொடுத்த சிறந்த முறையாகும்.*

*உலகில் முதன் முதல் பஞ்சு கண்டுபிடிக்கப் பட்டதே தமிழகத்து மண்ணில்தான் என்று பி.டி. சீனிவாச அய்யங்கார் கூறியுள்ள கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*எனவே காயப்பட்ட புண்ணைப் பருத்திப் பஞ்சால் துடைத்து, புண் மேல் கட்டுப்போடும் பழக்கத்தை உலகிலேயே முதன் முதலாகப் பயன் படுத்த ஆரம்பித்த இனம் தமிழினம் தான்.*

*இப்பழக்கமே உலகெங்கிலும் தொடர்கிறது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.*

*ஆனால் இவைகளை சொல்லிக்கொள்ளத்தான் நாம் மிகவும் தயக்கம் கொள்கிறோம் .சொன்னால் செவி சாய்ப்பவர்களும் அதிகம் இல்லை !நாம் முன்பு எப்படி இருந்தோம் என்று அறிந்தால் வருங்காலத்தில் எங்கே சென்று எப்படி இருக்கவேண்டும் என்று புரியும் .*

*தெளிந்த கடந்த கால வரலாறு வரும் காலத்தை நிர்ணயிக்கும் நுண்ணிய கருவி! ராஜப்பாளையம் அருகில் இருக்கும் சத்திரப்பட்டிதான் இன்றும் சர்ஜிக்கல் காட்டன் எனும் மருத்துவ சல்லா துணிக்குஅதன் ஏற்றுமதிக்கு மிகப்பிரசித்தம்*

*ஆனால் அத்தகை ஒரு வித பித்தியோகத்துணியை பண்டைய தமிழர் செய்து பயன்படுத்தினர்.அது எதனால் ஆனது என்பதுதான் வியப்பானது .*

*அது எலியின் முடியால் ஆனது !அறுவை மருத்துவ முறைகளைப் பற்றிக் குறிப்புகளுடன், என்னென்ன முறைகள் செய்யப் பட்டன? என்பதை விளக்கிக் கூறுவதாக அமைகிறது சீவகசிந்தாமணி.*

*சீவக சிந்தாமணிவிரிவான செய்திகளைத் தருவனவாக அமைந்து அறுவை முறை மருத்துவத்தை விவரிக்கிறது.*



*"நெய் க்கிழி வைக்கப்பட்டார்*
*நெய்ப்பத்தல் கிடத்தப்பட்டார்*
*புக்குளி யெஃக நாடி*
*யிரும்பினாற் போழப் பட்டார்.*
*முதுமரப் பொந்து போல*
*முழுமெய்யும் புண்க ளுற்றார்க்கு*
*இது மருந் தென்ன நல்லார்*
*இழுது சேர் கவளம் வைத்து*
*பதுமுகன், பரவை மார்பில்*
*நெய்க் கிழிப் பயிலச் சேர்த்தி*
*நுதிமயிர்த் துகிற்குப் பாயம்*
*புகுகென நூக்கி னானே."(சீவகசிந்தாமணி: 818-819)"(சீவகசிந்தாமணி: 818-819)*

*மரப்பொந்து போல் உடல் முழுவதும் ஏற்பட்ட புண்களுக்கு ஏற்ற மருந்து எது? என்பதை அறிந்த மருத்துவர், அம்மருந்தை வாயில் கவளத்தை வைப்பது போல் வைப்பர்; நெய்யில் தோய்ந்த துணியைப் புண்ணின் மேல் வைப்பர்; புண் பட்டாரை நெய்ப்பத்தலில் கிடத்துவர்; புண்ணுக்குள் புகுந்த இரும்புத்துண்டுகளை அறுவை முறையால் அறுத்தெடுப்பர்.*

# வாழ்வில் இனிமைகாத்து வாழ்க!

**முனைவர் ஜெயந்தி**



'எண்ணம் போல் வாழ்வு' என்பது மறுக்க முடியாத உண்மையாகும். எண்ணம், சொல், செயல் உயர்வாக இருந்தால் வாழ்க்கை இனிமையாக இருக்கும். இனிமை என்பது இணக்கம் (Harmony).

இன்பமான வாழ்வே அனைவரின் நோக்கமாக உள்ளது. எங்கும் இன்பத்தை இறைநிலை நிரப்பி வைத்துள்ளதை ஞானிகள் உணர்ந்தனர். எல்லாம் இன்பமயம் என்றனர்.

எத்தனை கோடி இன்பம் வைத்தாய்! எங்கள் இறைவா! இறைவா! இறைவா!
சித்தினை அசித்துடன் இணைத்தாய் - அங்கு
சேரும் பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை உலகமும் வர்ணக் களஞ்சிய
மாகப் பலப்பலநல் அழகுகள் சமைத்தாய்!

என்று புறவாழ்க்கை வறுமையும், போராட்டமும் நிறைந்ததாக இருந்தாலும், உண்மையை உணர்ந்த நிலையில், அனைத்தையும் கண்டு வியந்து இன்பத்தில் திளைத்து மகிழ்ந்தார் மகாகவி பாரதியார்.

'எண்ணுந் தோறும் எண்ணுந் தோறும் என்னுள் இனிக்குதே
இறைவா நின்னைப் பாட நாவில் அமுதம் சனிக்குதே'

என்றார் வள்ளலார்.

'இன்ப ஊற்றாய் நிறைந்த இறைவா எங்கும்
இன்ப ஊற்றாய் நிறைந்த இறைவா!
அன்பும் கருணையுமாய் அனைத்து உயிர்களூடும்
இன்ப ஊற்றாய் அறிவாய் இயங்கும் பராபரமே!

எழிலுலகம் படைத்து எல்லா உயிர்களுக்கும்
வழிவழியாக வாழ வாய்ப்பை நிரப்பி வைத்து
ஒழிவிலாத் தொடராக உள்ளும் புறமும் ஊற்றாய்
இன்ப ஊற்றாய் நிறைந்த இறைவா' என்று போற்றுவார் வேதாத்திரி மகரிசி.

இன்பத்து ளேபிறந்து இன்பத்து ளேவளர்ந்து
இன்பத்து ளேநினைக் கின்றது இதுமறந்து
துன்பத்து ளேசிலர் சோறொடு கூறையென்று
துன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே. திருமந்திரம் - 2089

என்கிறார் திருமூலர்.

**துன்பத்துக்கு காரணம்:**

*வாழும் முறை வாழும் நோக்கத்திற்கு மாறாக இருப்பதால்தான் துன்பம் உண்டாகிறது. வாழும் நோக்கம் - மகிழ்ச்சி, அமைதி, நிறைவு.*

*வாழும் முறை - ஆசைக்கு அடிமையாகி பொருள், புகழ், செல்வாக்கு புலனின்பத்தில் சிக்கித் தீய விளைவுக்கான பதிவுகளைப் பெற்று அமைதியை இழக்கிறது.*

*துன்பத்துக்கு காரணம் ஏமாற்றம். ஏமாற்றத்திற்கு காரணம் எதிர்பார்ப்பு. எதிர்பார்ப்புக்கு காரணம் ஒப்பீடு. ஒப்பீட்டுக்குக் காரணம் மனமும் அதன் இயல்பும்.*

**எண்ணமே காரணம்:**

*மனம் வெளி நிகழ்ச்சிகள் மற்றும் பொருட்களோடு தொடர்பு கொண்டு, ஏற்கனவே பெற்றுள்ள பட்டறிவோடு (அனுபவத்தோடு) ஒப்பிட்டுக் கணித்தலை எண்ணம் என்பர். எண்ணமே அனைத்திற்கும் காரணமாவதால் எண்ணத்தில் கவனம் வேண்டும்.*

**இனிமை காத்தல் நான்கு வகை:**

*1.உடலுக்கும் உயிருக்கும் இனிமை காத்தல் – உடல்நலம், உடற்பயிற்சி, மூச்சுப் பயிற்சி*

*2.உயிருக்கும் மனதுக்கும் இனிமை காத்தல் - மனதின் சமநிலை தவப்பயிற்சி*

*3.தனக்கும் சமுதாயத்துக்கும் இனிமை காத்தல் - அறநெறி*

*4.தனக்கும் இயற்கைக்கும் இனிமை காத்தல் – நிறைவு, அமைதி, முழுமைப் பேறு*

*வாழ்வில் இனிமை காக்க நான்கு முறைகள் வகுக்கப்பட்டு உள்ளன.*

**ஏமாற்றத்தால் துன்பம் வரும் வழிகள்:**

*எதிர்பார்த்தது கிடைக்காத ஏமாற்றத்தால் துன்பம் உண்டாகின்றது.*

*1.தன்னால் - பேராசை, அறியாமை, தப்புக்கணக்கு, விழிப்பின்மை.*

*2.பிறரால் - பகை, உறவினர், பொறாமைப் படுவோர்.*

*3.இயற்கையால் - இயற்கை சீற்றம், வெள்ளம், நிலநடுக்கம், சுனாமி, தொற்றுநோய்கள்.*

ஏமாற்றத்தின் அளவுக்கேற்ப அதிர்ச்சியும், துன்பமும் உண்டாகும். ஈடு செய்ய ஏற்ற காலம், ஏமாற்றத்தின் அளவுக்கேற்ப வேறுபடும் என்பார் வேதாத்திரி மகரிசி.



**பேராசை:**

தேவையே ஆசையாகி, அது அளவுக்கு மீறும்போது பேராசையாகிறது. உடலாலோ, அறிவாலோ, பொருளாலோ, (தகுதிக்கு மீறி ஆசை கொண்டு) நிறைவேற்ற இயலாத போது துன்பத்தை தருகிறது.

'ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல் லாங்கட்டி
ஆளினும் கடல்மீதிலே

ஆனணசெல வேநினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்'

என்பார் தாயுமானவர்.

'ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே' (திருமந்திரம் - 2615)

என்பார் திருமூலர்.

'ஆசையே துன்பத்திற்கு காரணம்'.
'பொன் நாணயங்களை அடை மழையாகப் பெய்தாலும்
ஆசைகள் அடங்காமல் பெருகும்' (த.ப.186)

என்பார் புத்தர்.

**பணத்தாசை:**

'மனிதர்களைப் பாருங்கள், கட்டுண்டு கிடப்பவர்களே அதிகம். காமம், பணத்தாசையில் பற்று வைத்து இவ்வளவு துன்பத்திற்கு உள்ளாகின்றனர் என்றாலும் பற்றுவிட்ட பாடில்லை. முட்செடியைத் தின்பதால் ஒட்டகத்தின் வாயிலிருந்து இரத்தம் பீறிடும், இருந்தாலும் அது முட்செடியைத் தின்பதை விடாது' என்பார் இராமகிருஷ்ணர்.

> 'வருந்தி அழைத்தாலும் வாராத வாரா
> பொருந்துவன போமினென்றால் போகா - இருந்தேங்கி
> நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம் நினைந்து
> துஞ்சுவதே மாந்தர் தொழில்.'

என்பார் ஔவையார்.

**அறியாமை:**

தன்னைப் பற்றி அறியாமை, நோய், பிணக்கு, தோல்வி இவற்றுக்கான காரணம் அறியாமை, இயற்கையைப் பற்றி அறியாமை, செயல் விளைவு பற்றி அறியாமை. ஒவ்வொரு செயலுக்கும் விளைவு உண்டு என்று அறியாமையால் துன்பம் அடைகின்றனர். அறியாமல் செய்வது தவறு, மன்னிப்பு உண்டு. அறிந்தே செய்வது தப்பு - தண்டனை உண்டு. அறியாமை நீங்கினால் துன்பமில்லை.

**குறிக்கோளின்மை:**

வாழ்வில் குறிக்கோள் இல்லாமல் இருப்பதால் சலிப்பு உண்டாகின்றது. படகோட்டி இல்லாத படகு போல் கரை சேர இயலாமல் தத்தளிக்கின்றது.

> 'பொறி இன்மை யார்க்கும் பழிஅன்று அறிவறிந்து
> ஆள்வினை இன்மை பழி' (திரு: 618)

அறிய வேண்டியவற்றை அறிந்து முயற்சி செய்யாது இருப்பதே குறையாகும் என்பார் திருவள்ளுவர்.

உயர்ந்த குறிக்கோளோடு செயல்படும்போது துன்பங்கள் பொருட்டாகத் தெரிவதில்லை.

**உணர்ச்சி வயம்:**

மனதின் வேகத்தைக் குறைத்தால் விவேகம். உணர்ச்சிவயப்பட்டு புலன்கள் வழி செயலாற்றுவதால் பழிச்செயல்கள் பதிவாகின்றன. பேராசை, சினம், கடும்பற்று, முறையற்ற பால் கவர்ச்சி, உயர்வு தாழ்வு மனப்பான்மை, வஞ்சம் எனும் ஆறு

குண வயப்பட்டு ஐந்து பெரும் பழிச் செயல்கள் பொய், களவு, சூது, கற்பழிப்பு, கொலை என்பனவற்றுக்கு காரணமாகிறது.

'ஒழுக்கமது துன்பம்எழா அளவு முறையோடு
உணர்ச்சிகளைச் சீர்செய்து வாழும் முறையாகும்'

என்பார் வேதாத்திரி மகரிசி.

'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து.' (திரு - 126.)

என்பார் திருவள்ளுவர். தவப்பயிற்சி அதற்கு உறுதுணையாகும்.



**தப்புக் கணக்கு:**

எல்லை கட்டிய மனநிலையில் இதுதான் நடக்க வேண்டும், இப்படித்தான் நடக்க வேண்டும், இதுதான் சரி என்று ஒரு முடிவை வைத்துக்கொண்டு செயல்படும்போது, நினைப்புக்கும் நடப்புக்கும் உள்ள வேறுபாடு துன்பமாகிறது. எதிர்பார்த்தபடியே எல்லாம் நடக்கும் என்பது தப்புக் கணக்கு.

'தப்பு கணக்கிட்டுத் தான் ஒன்றை எதிர்பார்த்தால்
ஒப்புமோ இயற்கைவிதி ஒழுங்கமைப்பிற் கொத்தபடி
அப்போதைக் கப்போது அளிக்கும் சரிவிளைவு
எப்போதும் கவலையுற்று இடர்படுவார் இதையுணறார்'
என்பார் வேதாத்திரி மகரிசி.

***விழிப்பின்மை:***

*மனம் தற்காலத்தில் நிலைத்தல். எண்ணம், சொல், செயல்களில் விழிப்போடு இருத்தல். மூன்று காலம் அறிந்து, கடந்தகால அனுபவம், நிகழ்கால சூழ்நிலை எதிர்கால விளைவு கணித்து செயலாற்றினால் இனிமை காக்கப்படும்.*

*'மனவாக்கு காயத்தால் வல்வினை மூளும்*
*மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னா*
*மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னால்*
*தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. (திருமந்திரம் - 2612)*

*என்பார் திருமூலர்.*

*'மக்கள் விழித்துக் கொண்டிருக்கும் வீட்டில் திருடன் நுழைவதில்லை. அதுபோல நீ எப்போதும் எச்சரிக்கையாகவும் விழிப்போடும் இருந்தால் உனது தூய்மையை கொள்ளை கொள்ளக்கூடிய தீய எண்ணங்கள் உன் மனதில் நுழையாது' என்பார் இராமகிருஷ்ணர். மனம் விழிப்போடிருந்தால் துன்பமில்லை.*

***நட்பு நலம்:***

*குடும்பத்தில், சமுதாயத்தில், நாட்டில், உலகில் எல்லா மக்களிடையேயும் நட்பு நலம் காத்தல் மன அமைதிக்கு வழிவகுக்கும்.*

*'தனது குறை ஆழ்ந்துணர்ந்து திருத்தம் பெற்றால்*
*தருக் கொழியும் பிறரிடம் நட்பு ஓங்கும்'*

*என்பார் வேதாத்திரி மகரிசி.*

*'பொறாமை உணர்ச்சியை வேரோடு கெல்லியெறிந்தவனே*
*இரவிலும் பகலிலும் அமைதியாயிருக்கிறான்.*
*மனதின் சமநிலையில் பிறப்பது உற்சாகமும்*
*நிம்மதியான தொரு நிலை'*

*என்பார் புத்தர்.*

*இயற்கைக்கு முரண்படாது, இயற்கையோடு இயைந்து வாழும் போது மனித வாழ்க்கையில் இனிமை காக்கப்படுகிறது.*

*அறநெறியும், இறையுணர்வும் இன்பமான வாழ்க்கைக்கு வழி வகுக்கும். வாழ்வில் இனிமைகாத்து வாழ்வோம்.*

# இலக்கியங்களில் சமூக செயல்பாடுகள்

**ச.சபாரத்தினம்,**
கோயமுத்தூர்



இலக்கியங்கள் என்பவை தம்முள் ஏதேனும் சமூக அக்கறைகளைப் பொதிந்து வைத்திருக்கின்றனவா அல்லது வெறும் பொழுதுபோக்கு வகையாகவே திகழ்கின்றனவா - என்று நோக்கினால் இரண்டு வகைகளுமே உண்டு என்றே நாம் அறியக்கூடும். இக்கட்டுரையில் இலக்கியங்களில் சமூக செயல்பாடுகள் குறித்துக்காண்போம்.

மனித வாழ்தலுக்கு இன்றியமையாதது உணவு. புறநானூற்றுப்பாடல் ஒன்றில் குடபுலவியனார் - பாண்டியன் நெடுசெழியனைப்பாடுகிறார்.

"நீரின்றி அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"
யாக்கைக்கு நீர் அவசியம் என்னும் போதே, வள்ளுவன் வாக்கான
"நீரின்றி அமையாது உலகு"
"நினைவுக்கு வரும். கூடவே நீருக்கு ஆதாரமான"
"மாமழை போற்றுதும், மாமழை போற்றுதும் "
என்ற சிலப்பதிகார வரிகள் நினைவுக்கு வரும்.

உணவு ஈதல் என்ற அறச்சிந்தனையின் போது, ஆபுத்திரன், அமுதசுரபி, காயசண்டிகையின் ஆனைப்பசி நோய் மணிமேகலை அமுத சுரபியால் உணவிட அந்த நோய் நீங்கியது எல்லாம் நினைவுக்கு வரும்.
திருமந்திர வரிகளான

"அகரம் ஆயிரம் ஆரியற்கு ஈயின் என்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கின் என்
பகரும் ஞானி ஊண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயம் தானே!" - இவை ஞானிகளுக்கு நண்பகல் உணவு அளித்தலின் முக்கியத்துவம் உணர்த்துகின்றன.

பசிப்பிணி போக்குதல் பற்றி பல நூல்கள் வலியுறுத்தியதுபோல் அதற்கு ஈடாகவும் இணையாகவும் ஏன் அதற்கு மேலாகவும் கூட வலியுறுத்தப்படுவது கல்வியறிவு அளித்தல்.

"அன்னசத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்
அன்னயாவினும் புண்ணியம் கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"
என்கிறார் பாரதி.
அதேபோல் கல்வி கற்றலின் சிறப்பை ஔவையார்
"பிச்சை புகினும் கற்கை நன்றே"
என்று வலியுறுத்துகின்றார்.
எழுத்துலக ஜாம்பவான்களில் ஒருவரான நா பா என்னும் நா.பார்த்தசாரதி பல நாவல்களில் சமுதாயக்கருத்துக்களையும் இழையோட விட்டிருப்பார். அவரது "சத்திய வெள்ளம்" என்ற நாவலில்
"தன்மானமுள்ளவன் பிறரை அவமானப்படுத்தமாட்டான்.



சுய மரியாதை தெரிந்த எவனும் பிறரை
அவமரியாதை செய்யமாட்டான்" என்று கூறுவார்.

சாகித்ய அகாடமி விருதுபெற்ற அவரது நாவலின் பெயரே "சமுதாய வீதியிலே" தான். மனிதர்களின் பலவிதமான குணங்களையும் நகர வாழ்க்கையின் அவலங் களையும் அதில் அலசியிருப்பார்.

மற்றொரு ஆளுமையான ஜெயகாந்தன் நாவல்களில் ஏழைகளின் வாழ்க்கை அவலங்களைப் பகிர்ந்திருப்பார்.

முு.மேத்தா தன் கண்ணீர்ப்பூக்களில் எழுதுகிறார்.


மு.மேத்தா

"நம் சமுதாயத்தைக்காக்கப் போராடும்
ஒரு மனிதாபிமானியின்
வாத விவாதங்கள் நடக்கும்
.......................
ஓ என் தோழர்களேஎன் பாடலைப்பத்திரப்படுத்தினீர்கள்.
இப்போது என்னை என்ன செய்யப்போகிறீர்கள்";
"எங்கெல்லாம் மானுடம் காயம் படுகிறதோ
அங்கெல்லாம் பூக்கும்"

சகோதர சோகங்களின்
சர்வ தேசியப் பூக்கள்"

என்று தன் கண்ணீர்ப் பூக்களுக்கு முகவுரை கொடுக்கிறார். இவரைப்போலவே கந்தர்வன் மீரா - ஏன் 1970 களின் வானம் பாடிக் கவிஞர்கள் அத்துணை பேருமே சகமூ அக்கறை கொண்டு எழுதியவர்கள்தான்.

கவிதைகள் நாவல்கள் சிறுகதைகள் ஏன் கட்டுரைகள் கூட ஒரு வகை இலக்கியமே!... இவற்றில் விரவிக்காணப்படும் சமூக சிந்தனைகளும் செயல்பாடுகளும் - வெகு அதிகம். நா ன் கூறியவை மிக மிகக் குறைவே.









*அருந்தமிழ் வளர்த்த அருளாளர்கள் - 4*

# உரைநடைத் தந்தை 'தத்துவ போதகர்' இராபர்ட் - டி – நொபிலி

**பேரா.முனைவர் மோ.மைக்கேல்பாரடே**
*மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,*
*சென்னைக் கிறித்தவக்கல்லூரி*



*காலத்தால் மூத்த ஞாலத்தின் முதன் மொழியாக இன்றளவும் மொழி நூலாரால் போற்றி மதிக்கப்படும் அன்னைத் தமிழின் அருமை பெருமைகளையும் அறப்பழமையையும் அகிலம் அறியச் செய்த அரும்பணியாளர்களுள் முன்னோடிகளாய்த் திகழ்ந்தவர்கள் ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த கிறித்தவ அருளாளர்களே என்பது மறக்க முடியாத வரலாற்றுண்மை.*

*அந்த வரலாற்றை அருளாளர்களின் தொண்டுக் கால நிரலின் படி தொகுத்துக் காட்டுவதே இக்கட்டுரைத் தொடரின் தலையாய நோக்கமாகும். அவ்வகையில், அவ்வருளாளர்களின் பன்முகப் பைந்தமிழ்ப் பங்களிப்புகளைப் பற்றிய பொதுவான அறிமுகத்தோடு தொடங்கி, பதினேழாம் நூற்றாண்டில் அரும் பணிசெய்த பார்த்த லோமியோ சீகன்பால்கு அடிகளாரையும் பதினாறாம் நூற்றாண்டில் பெரும்பணி புரிந்த ஆண்டிரிக்கசு அடிகளாரையும் பற்றி முந்திய கட்டுரைகளில் பார்த்தோம்.*

*இந்த கட்டுரையில் அதே பதினாறாம் நூற்றாண்டில் பல முதன்மை சார்ந்த கொடைகளைத் தமிழுக்கும் தமிழ்க்கிறித்தவத்துக்கும் நல்கிய மாமனிதர் இராபர்ட் - டி - நோபிலி அவர்களின் புரட்சிகரப் பணிகளை பற்றி ஆய்ந்தறிய முற்படுவோம்.*

*I அடிகளாரின் பிறப்பு - கல்வி - இந்திய வருகையும் வாழ்வும், பணிகளும் பற்றிய செய்திகள்*

*'தத்துவ போதகர்' என்ற அடைமொழியோடு பெரிதும் அழைக்கப்படும் (இவருக்குப் பின்வந்த வீரமாமுனிவர் தான் இவ்வாறு இவரை முதலில் அழைத்ததாகத் தெரிகிறது)*

*இராபர்ட் - டி - நோபிலி யாரின் படைப்புகளையும் பணிகளையும் பற்றி அறியத் தலைப்படுமுன், அவரது வாழ்க்கை வரலாறு சார்ந்த குறிப்புகளையும் அவரது இந்திய வருகையும் வாழ்வும் பணிகளும் பற்றி தொகுத்தறிய முற்படுவோம்.*

***பிறப்பு:***

*இராபர்ட் - டி - நோபிலியின் பெற்றோர்கள் பிரான்சிஸ் கோ - டி நொபிலி, கிளாரிஸ் சி யோலி என்போராவர். செல்வ வளம் மிக்க பிரபுக் குடும்பத்தைச் சேர்ந்த இப் பெற்றோருக்கு முதல் மகனாக 1577ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் (தேதி தெரியவில்லை) இத்தாலிய நாட்டுத் தலைநகர் ரோமாபுரியில் பிறந்தார். இவரது பெற்றோர் வீட்டிலேயே ஆசிரியரை நியமித்து இவருக்குத் தொடக்கக் கல்வித் தந்தனர் எனில் அவரது வளமான குடும்பச் சூழலை நாம் ஊகிக்கலாம். பின்னர் உரோமிலேயே கல்லூரிப் படிப்பை முடித்து, தமது 26 ஆவது வயதில் இயேசுசபையில் சேர்ந்து சமயக் குருவானார். தொடக்கம் முதலே இந்தியாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த இவருக்கு, இளமை முதலேயே இந்தியாவுக்குச் சென்று இறைப்பணியாற்ற வேண்டும் என்ற ஈர்ப்பு இருந்தது. அதனால் குடும்பத்தினர் மற்றும் பிறர் அனுமதி பெற்று, முதலில் போர்த்துகல் நாடு சென்று, அந்நாட்டு அரசரிடம், அனுமதி பெற்று, 1604 ஆம் ஆண்டு இந்தியா நோக்கி கடற் பயணம் மேற்கொண்டார். முதலில் கோவா பகுதிக்கு 1606 மேத்திங்கள் வந்து சேர்ந்தார். அங்குள்ள புனித பவுல் பள்ளியில் தங்கி, தம் இறையியல் கல்வியைத் தொடர்ந்து படித்து முடித்து, பிறகு கொச்சிக்குச் சென்றார். அங்கிருந்து கிழக்குக் கடற்கரைப் பக்கம் செல்ல வேண்டியதாயிற்று. அங்கே, ஓலை வேய்ந்த குடிசையில் தங்கி, அங்குள்ள ஏழை எளிய மக்களிடமிருந்து அரும்பாடு பட்டு தமிழ் கற்றதாக அவரது வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.*




***தமிழ்க் கல்வியும் புலமையும்:***

*அந்தப் பகுதியில் ஏழு மாதங்கள் கடுமையாக உழைத்து, தமிழ் பேசவும் எழுதவும் திறன் பெற்றவராகத் தம்மை ஆக்கிக் கொண்டார். அந்தக் கடற்கரைப் பகுதியிலிருந்து. மதுரை நகருக்கு வந்தார். கடற்கரைப் பகுதியில் பேச்சுத் தமிழ் கற்ற நொபிலி, மதுரைக்கு வந்த பொழுது உயர் நடைத் தமிழையும் கற்றுக்கொண்டார். மதுரை மாநகர் வந்து சேர்ந்த ஆறு மாதங்களிலேயே, மொழிபெயர்ப்பாளர்கள் உதவியின்றித் தமிழைப் பிழையறப் பேசவும் ஆன்மீக உண்மைகள் பற்றி அங்கிருந்த பிராமணர்களோடு தமிழிலேயே தருக்க வாதம் புரியவும் அவர் வல்லமை பெற்றார். தமிழில் இவர் நிகழ்த்தும் ஆன்மீகப் போதனைகளைக் கேட்க நாள்தோறும் பெருந்திரளான மக்கள் இவரைத் தேடி வருவார்களென இவரைப் பற்றி வரலாற்றறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி*

எழுதுகிறார். இவரது தமிழ்ப் புலமையையும் பேச்சாற்றலையும் பற்றி அருட்தந்தை லெரிசியோ என்பவர் உரோமில் உள்ள இயேசு சபைத் தலைவருக்கு இவ்வாறு கடிதம் எழுதியுள்ளார்.

"நொபிலி அடிகள் தூய்மையான தமிழைக் கற்றுள்ளார். மேலும் அவர் அதைச் சிறந்த முறையில் உச்சரிக்கின்றார். எவ்வாறெனில் மிக்க மனநிறைவு கொள்ளாத பிராமண அறிஞர்கள் அவருடைய சொல்லாண்மையை மேம்படுத்த முடியாத அளவுக்குத் திறமை மிக்கவராய் இருக்கிறார். ஏற்கெனவே அவர் அநேக நூல்கள் வாசித்திருந்தார். மேலும் இன்றியமையாத பகுதிகளின் விதிகளையும் மிகவும் பேர்போன கவிஞர்களின் அநேகக் கவிதைகளையும் மனப்பாடம் செய்து கொண்டார். அவர் அநேகப் பக்திப் பாடல்களை மனப்பாடம் செய்து அவைகளை இறைவன் புகழாகப் பாடி வந்தார். நொபிலி முழுமையாகவும் கவர்ச்சியாகவும் பாடுவதை அனைவரும் மகிழ்ச்சியோடு கேட்பார்கள். மேலும் அப்பாடல்களைப் பாடக் கேட்பவர்கள் தங்களின் வியப்பை மறைக்க முடியாதவர்களாக இருந்தனர்."

அவ்வாறே, நொபிலி அடிகளின் சக மறைப்போதகரான தந்தை அந்தோணி புரோயன்சா அவருடைய மும்மொழிப் புலமை பற்றியும் நாவன்மை பற்றியும் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

"தந்தை இராபர்ட் தெ நொபிலி இந்த நாட்டில் பேசப்படும் மொழிகளான தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் மிகவும் மேம்பட்டவராக இருந்தார். அவர் உள்நாட்டு அறிஞர்களின் வியப்பிற்குக் காரணமாய் இருந்தார். இந்த மொழிகளில் அவரது விரிந்த ஆழமான அறிவுக்கு யாரும் சமமாகவோ அல்லது மேம்பட்டவராகவோ இருக்க முடியாது. அவரது கவர்ச்சியான பேச்சு, உறுதியான வலிமை, சரளமாய்ப் பேசுவது அல்லது அளவளாவுவதில் அவரது நாவன்மை ஆகியவற்றில் யாரும் இவருக்கு நிகராக இருக்க முடியாது. என்பது என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.''

**மதுரையில் தொடங்கிய சமயப்பணி:**

இவ்வாறாக, மதுரை வந்து சேர்ந்து, தன் சமயப் பணியைத் தொடங்கிய நொபிலி அடிகளார், தமக்கு முன் இருந்த சமயக் குருக்கள் இங்குள்ள மக்களை கிறித்துவ மறைக்கு மாற்றுவதில் வெற்றி காண முடியாததைக் கண்டார். எனவே, முழுக்க இந்தியமயமாக்கல் முறையினால் தான் இம்மக்களுக்கு கிறித்தவ நற்செய்தியை அறிவிக்க முடியும் என்று கருதினார். மேலும், சாதிய அடக்குமுறைகளுக்குட்பட்டு அல்லலுற்ற பிற்பட்ட சாதி மக்கள் கிறித்தவ மறையைப் பெருமளவு தழுவினும், உயர்குல மக்களாகத் தம்மைக் கருதிக் கொள்ளும் பிராமணர்களும் பிற உயர் சாதியினரும் அக்காலத்துக்

கிறித்தவத்தையும் கிறித்தவர்களையும் இழிவாகக் கருதியதை அவர் கண்டுணர்ந்தார். இக்கிறித்தவர்கள் அயல்நாட்டிலிருந்து வந்த பறங்கியர்கள், பன்றிக்கறி உண்டு மது அருந்துபவர்கள் என்றெல்லாம் வெறுப்போடு பேசத் தலைப்பட்டனர். இந்நிலையை மாற்ற நொபிலி அடிகளார் கங்கணம் பூண்டு, புரட்சிகர மாற்றங்களைத் தம் மறை பரப்புப்பணியில் விளைக்கத் தொடங்கினார்.

**இந்தியாவுக்கு வேத உண்மைகள் இந்தியப் பண்பாட்டு வழியாகவே:**

இந்தியர்கள் குறிப்பாகத் தமிழ்நாட்டவர் கிறித்தவ மறை நூலை ஏற்க, அவர்களது பண்பாட்டு மற்றும் சமயப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றியே அவர்களோடு வாழ்ந்து பணி செய்ய வேண்டும் என முடிவெடுத்தார். அதனால் தமது பெயரையும் நடை உடை பாவனைகளையும் மாற்றிக் கொண்டார். இந்து சமயத் துறவிகளைப் போல, சைவ உணவு மட்டுமே உண்டு, நெற்றியில் சந்தனப் பொட்டுத் தரித்து, மார்பில் பூணூலும் போட்டுக் கொண்டார். அப்பூணூலில் மூன்று புரிகள் பொன்னாலும் மற்ற இரண்டு புரிகள் வெள்ளியாலும் ஆனவை. மூன்று பொற் புரிகளும் கிறித்தவத்தின் மும்மை நிலைக் கடவுளைக் குறிப்பன வென்றும் பிற இருபுரிகள் இயேசு கிறிஸ்துவின் உடலையும் உயிரையும் குறிப்பன என்றும் தத்துவ விளக்கங்கள் தந்தார். அப்பூணூலில் சிலுவையொன்றையும் இணைத்துத் தொங்க விட்டிருப்பாராம். தம்மை இராணா சந்நியாசி, என்றும் தான் கொண்டு வந்தது சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட ஐந்தாம் வேதமாகிய 'ஏசுர வேதம்' என்றும் பிரகடனப்படுத்தினார். தம்மை இத்தாலியில் இருந்து வந்த பிராமண சுவாமியாராக அறிமுகப்படுத்திக் கொண்டார். இங்குள்ள மக்கள் கிறித்தவ மறையைத் தழுவினாலும், அவர்கள் தங்கள் சாதி, குலப்பழக்கங்களையோ இந்து சமய நடைமுறைகளையோ விட்டுவிட வேண்டும் என்று வற்புறுத்தவில்லை. இம்மாற்றங்களை எல்லாம் அவர் செய்ய வன்மை பெறும் வண்ணம், தமிழ், சமஸ்கிருதம் (வடமொழி) தெலுங்கு ஆகிய மும்மொழிகளிலும் அவர் சிறந்த புலமை பெற்றிருந்தார். இவ்வாறு இந்திய மொழிகளில் புலமை பெற்ற முதல் ஐரோப்பியர் இவர்தான் என்று பலராலும் பாராட்டப் பெறுகிறார்.

**சமயப் பணியில் எதிர்ப்பும் பின்னடைவும்:**

இவரது வித்தியாசமான சமயப் பணிக்கு ஆரம்பத்தில் உள்ளூர் மக்களிடையே மிகுந்த ஆதரவு இருந்த போதிலும், போகப் போக பல உயர் குல மக்களும் இவரைச் சந்தேகிக்கவும் விமர்சிக்கவும் முற்பட்டனர். இவரது உடன் மறைப்பணியாளர்களும் இவரோடு முரண்பட்டு, இவரைப் பற்றிய புகார்க் கடிதங்களை மேலிடத்துக்கு எழுதினர். அதன் பொருட்டு இவர் பல விசாரணைகளை எதிர்கொள்ள நேர்ந்தது. தம்மீது கூறப்பட்ட புகார்களுக்கு இவர் மறுப்பு தெரிவித்தார். இறுதியாக, உரோமையில் உள்ள கத்தோலிக்கத்

திருச்சபையின் தலைவரான போப்பாண்டவர், இவரைக் குற்றமற்றவர் என அறிவித்து இவரது இந்திய மயமாக்கும் முறையை அனுமதித்தார்.

எனினும் இவர் பின்னர் மதுரையை விட்டு மேலிட உத்தரவின்படி வெளியேற வேண்டி இருந்தது. மதுரையில் இருந்த காலத்து, அங்கிருந்த புகழ் பெற்ற மன்னனான திருமலை நாயக்கரோடு நல்லுறவு கொண்டிருந்தார். சிலருடைய பொய் புகார்களால் இவர் ஒரு கட்டத்தில் சிறைபிடிக்கப்பட்டார். இவரது உடன் ஊழியர்களும் துன்புறுத்தப்பட்டனர். எனினும் திருமலை நாயக்கர் வெளியூரிலிருந்து மதுரை திரும்பிய பிறகு, அடிகளாரையும் பிற மறைப்பணியாளரையும் விடுவித்ததாகக் கூறப்படுகிறது.

**இலங்கைப் பயணமும் தமிழக மீட்சியும்:**

மதுரையில் இருந்து சில காலம் இலங்கை சென்ற நொபிலியார், பின் மீண்டும் தமிழகம் திரும்பினார். திருச்சி, சேலம் முதலிய பகுதிகளிலும் இவர் சமயப் பணியாற்றியதாகத் தெரிகிறது. இவர் புகழ்பெற்ற சைவ ஞானி துறைமங்கலம் சிவப்பிரகாசரோடு சமயவாதம் புரிந்ததாக வரலாற்று அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி எழுதியுள்ளார். இறுதியாக, சென்னை மீண்டு மயிலாப்பூரில் உள்ள தோமையார் ஆலயத்துக்கு அருகில் ஒரு சிறு வீடு அமைத்து, அதில் வாழ்ந்து அங்கேயே 1656 ஆம் ஆண்டு முதிர்ந்த வயதில் இறையடி சேர்ந்தார்.

**II அடிகளாரின் தமிழ்ப்பணியும் படைப்புக்களும்:**

நொபிலி அடிகளார் தம் சமயப் பணியை முன்னிட்டு எழுதிய பல்வகை நூல்கள், தமிழின் வளர்ச்சிக்குப் பெரிதும் வழிவகுத்த அருஞ்செல்வங்களாக அமைந்தன. இது பற்றி ஆய்வு செய்து இவரது வரலாற்றை எழுதியுள்ள பல்வேறு அறிஞர்களும், இவர் மொத்தம் 40 நூல்களையும் 3 செய்யுள் நூல்களையும் சமஸ்கிருத, தெலுங்கு மொழி நூல்களையும் எழுதியுள்ளதாகக் குறிப்பிடுகின்றனர். குறிப்பாக, இவரது வாழ்வும் பணிகளும் படைப்புக்களும் பற்றி அருட்தந்தை. இராசமாணிக்கம் அவர்கள் மிக ஆழமான - விரிவான ஆய்வு செய்து, தம் முதிர்ந்த வயதில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றார். இவரது நூல்களிலிருந்து, நொபிலி அடிகள் பற்றிய பல அரிய செய்திகளை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

**அடிகளாரின் நூல்களில் அச்சேறிய படைப்புக்கள்:**

நொபிலி அடிகளார் எழுதிய நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் பற்றி, குறிப்புக்கள் கிடைத்தாலும், பல நூல்களைப் பற்றிய விவரங்களே தெரியவில்லை. எனினும், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறை வெளியிட்டுள்ள காஞ்சி

எனும் தொகுப்பு நூலின் தரவின்படி, நொபிலியார் நூல்களில் பதிப்பு கண்ட **நூல்களின் பட்டியல் இது:**

*1. ஞானோபதேச காண்டம் (1, 2 காண்டங்கள்)*

*2. ஞானோபதேச காண்டம் (3ஆம் காண்டம்)*

*3. ஞானோபதேச காண்டம் (4ஆம் காண்டம்)*

*4. ஆத்துமநிர்ணயம்*

*5. ஞானோபதேசம் (26 பிரசுரங்கள்)*

*6. ஞானோபதேசக் குறிப்பிடம் (26 பிரசுரங்கள்)*

*7. அர்ச். தேவமாதா சரித்திரம்*

*8. தூஷணத் திக்காரம்*

*9. புனர்ஜென்ம ஆட்சேபம்*

*10. நித்தியஜீவன சல்லாபம்*

*11. கடவுள் நிர்ணயம்*

*12. சேசு நாதர் சரித்திரம்*

*13. உபதேசம்*

*14. திவ்வியமாதிரிகை (புதுகை)*

*15. திவ்வியமாதிரிகை (தூத்துக்குடி)*

*16. நீதிச்சொல் (திருச்சி)*

*17. நீதிச்சொல் (தூத்துக்குடி)*

*18. வணக்கம்*

*19. தர்ம நடக்கை*

*20. நல்ல மரண ஆயத்தம்*

*21. ஞான ஆறுதல்*

*22. ஞான சஞ்சீவி*

*23. பாவ சங்கீர்த்தனக் குறிப்பிடம்*

*24. அடியார் வரலாறு*

*25. தெய்வப்பரீட்சை*

***கிடைக்காத நூல்கள்:***

*மேற்குறித்த நூல்களே யன்றி, வேறு பல நூல்களையும் அடிகளார் எழுதியுள்ளதாகத் தெரிய வந்தாலும், அந்நூல்களோ அவை பற்றிய விவரங்களோ அறியக் கிடைக்கவில்லை.*



***அத்தகு சில நூல்கள் வருமாறு:***

*பேதகக் பரீட்சை, ஞானோபதேசப் பிரசுரங்களின் சில பதிப்புக்கள், ஞானதீபிகை, ஞானசங்ஷேபம், விசேஷ சல்லாபம், பத்துச்செல்லாபம், உபதேசச் சல்லாபம், சிலுவையின் விசேச சல்லாபம், மந்திர மாலை, அக்கியாண நிவாரணம், அண்ட பிண்ட வியாக்கியானம், உலகப் பிரமாண சாஸ்திரம், பரம சூட்சம அபிப்ராயம், சகுன நிவாரணம், தத்துவக் கண்ணாடி, வியாகுலப் பிரசங்கம், தபசுசதம், தபசுக்காலப் பிரசங்கம், சின்னக் குறிப்பிடம், பெரியக் குறிப்பிடம், சின்ன உபதேசம், பெரிய உபதேசம், இஞ்ஞாசியார் சரித்திரம். (ஆதாரம்: முனைவர். எம்.ஏ. சவேரியார் நூல்)*

***தமிழ்ச் செய்யுள் படைப்புகள்:***

*நொபிலியார், செய்யுள் நூலே படைக்கவில்லை என மயிலை சீனி. வேங்கடசாமி தம் நூலில் குறிப்பிட்டிருந்தாலும், மூன்று மொழிகளிலும் அவர் செய்யுள் நூல்கள் எழுதியமை தெரிய வருகிறது. ஒப்பாரி, ஆண்டவரின் பாடுகள் பற்றி,*

உண்மை சமயத்தின் விளக்கம் (700 அடிகள்) , நித்திய ஜீவியம் (2000 அடிகள்) ஆகிய செய்யுள் நூல்களைப் பற்றி முனைவர். இராசமாணிக்கம் குறிப்பிடுகிறார்.

**பிறமொழி நூல்கள்:**

தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் பல நூல்களை நொபிலியார் எழுதியுள்ளதாகத் தெரிகிறது. பல தமிழ் நூல்கள் (சின்னக் குறிப்பிடம் போல) தெலுங்கில் பெயர்க்கப்பட்டுள்ளன. இவரது மதச்சொற்பொழிவுகளைத் தெலுங்கில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். மேலும் தத்துவ கிரந்த சுலோகம், சத்தியவேத சங்கிரகம், மந்திரமாலா, தெய்வப் பரீக்ஷா புனர் ஜென்ம ஆட்சேபம், கிறிஸ்து கீதா, கிறிஸ்து மதகிரந்தா, அன்னை மரியாவின் வாழ்க்கை வரலாறு ஆகிய நூல்களைச் சமஸ்கிருத மொழியில் இயற்றியுள்ளார்.

**அடிகளாரது முக்கிய நூல்களின் உள்ளடக்கச்சாரம்**

**அ) ஞானோபதேசக் காண்டம்**

இந்நூல் அடிகளாரின் தலைசிறந்த வாழ்நாள் படைப்பு (Magnum opus) எனப் போற்றப்படுவது. இது ஐந்து பகுதிகளைக் கொண்டது. இந்நூலை அருட்தந்தை பல்த்தசார்டா கோஸ்டா என்பவர் போர்த்துகீசிய மொழியில் பெயர்த்துள்ளார். இந்த ஞான உபதேச நூலில், மூன்று வகையான உண்மைகள் கையாளப்பட்டுள்ளதாக ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்.

முதலாவது மனிதனின் பகுத்தறிவுக்குட்பட்ட உண்மைகள் அடுத்தது இறையியல் இரகசியங்கள் பிறகு மனித அறிவுக்கப்பாற்பட்ட இறையியல் (கிறித்தவ) கோட்பாடுகள். பிறகு, சில முக்கிய (கிறித்தவ) பிரார்த்தனைகள், பின்னர் இறைசமயத்தைப் பற்றிய முக்கியமான 13 குறிப்புக்கள் எனப் பல பகுதிகளாக அடிகளார் அமைத்துள்ளார். ஐந்து காண்டங்களில், ஒவ்வொன்றிலும் பல அதிகாரங்களை உள்ளடக்கி, இந்த பிரம்மாண்டமான இறையியல் தத்துவப் படைப்பை அடிகளார் உருவாக்கியுள்ளார்.

**ஆ) ஆத்தும நிர்ணயம்**

மனித ஆன்மாவின் தோற்றம், இயல்பு, முடிவு ஆகியவற்றைப் பற்றி விரிவாக விளக்குவதாக இந்நூல் அமைந்துள்ளது. 28 அதிகாரங்களைக் கொண்டுள்ளது. நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**இ) தூஷணதிக்காரம்**

பிற மதத்தினர் திருமறையாகிய பைபிள்மீது கூறும் குற்றச்சாட்டுகளை (தூஷணங்களை) 32 அதிகாரங்கள் வழியாக மறுத்துரைக்க எழுதப்பட்ட நூல். ஏற்கெனவே, புறச்சமயத்தினருக்கு மறுப்புரைகளாக அவர் எழுதிய ஆறு

*நூல்களைத் (ஞான தீபிகை, விசுவாச சல்லாபம், பேதகப் பரிடசை, ஞான சன்ஷேபம், ஞான உபதேசம், ஆத்தும நிர்ணயம்) தொடர்ந்து இவர் எழுதிய நூல் இது. உண்மையான மதம், மனுவுறுதல், சிலைகளின் வணக்கம், கிறிஸ்தவர்களின் சமுதாய நிலைப்பாடு, கிறிஸ்தவ மறையைப் போதிப்பவர்கள் முதலிய தலைப்புகளில் பல கருத்துகளைத் தமது வாதங்களாக அவர் இந்நூலில் எடுத்து வைக்கிறார்.*

***ஈ) ஞான உபதேசக் குறிப்பிடம்***

*ஞான உபதேசம் கேட்கின்றவர்கள் எப்படிப்பட்ட மனநிலையில் இருக்க வேண்டும் என்பதை இந்நூல் விளக்குகிறது. கடவுளின் திரு இருப்பு, அவரது தனி இயல்புகள், பாவம், மீட்பு ஆகியவற்றைப் பற்றி விளக்கி, அன்னை மரியாளின் பிறப்போடு நிறைவுறுகின்றது.*

***உ) புனர்ஜென்ம ஆட்சேபம்***

*இந்து சமயத்தின் மிக முக்கிய கோட்பாடாகிய மறுபிறப்பு என்ற ஒன்று இல்லை என்பதை எட்டு வாதங்களாக (சல்லாபம்) மறுத்துரைக்கும் நூல் இது. இந்நூலில் யஜுர் வேதத்திலிருந்து சில பாடல்களை நொபிலி எடுத்துக்காட்டுகிறார். ஆரிய வேதங்களான ரிக், யஜுர், சாம வேதங்களில் நொபிலிக்கு நல்லபுலமை இருந்ததாக முனைவர் இராசமாணிக்கம் குறிப்பிடுகிறார்.*

***ஊ) நித்திய சீவன சல்லாபம்***

*நீடு வாழ்வு எனப்படும் நிலைவாழ்வு அடைவது எப்படி என்பதை ஒன்பது சல்லாபங்களாக விரித்துரைகும் நூல். வினா விடை அமைப்பில் விளங்கும் இந்நூலும் வேறு சில உரைநடை நூல்களும் பகவத்கீதை, உபநிடதங்கள் போன்றவற்றின் சாயலைப் பெற்றிருப்பதாக அறிஞர் இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.*

***எ) அஞ்ஞான நிவாரணம்***

*பலவிதமான தவறான நம்பிக்கைகளுக்கு கிறித்தவ மறையின் அடிப்படையில் மறுப்புகளையும் மாற்றுக் கோட்பாடுகளையும் இந்நூலில் தந்துள்ளார். விஞ்ஞானி கலிலியோவின் கண்டுபிடிப்புகளையும் கோள்களின் இடையில் உள்ள தொலைவுகளைப் பற்றிய செய்திகளையும் குறிப்பிடுவது வியப்பளிக்கிறது.*

*நொபிலியாரின் நூல்கள் பலவும் அவர் வாய்மொழியாகச் சொல்ல, பிறர் எழுதியவைகளாக இருக்க வேண்டும் என ஆய்வாளர் இராசமாணிக்கம் கருதுகிறார்.*

## *III இராபர்ட் - டி - தொபிலி, 'தமிழ் உரைநடைத் தந்தை' என்பதேன்?*

*தமிழில் எல்லாத் துறை நூல்களுமே (கட்டடக் கலை, இசை, கூத்து முதலிய எல்லாமே) செய்யுள் வடிவில் அமைந்திருந்த காலத்தில், எண்ணற்ற நூல்களை உரைநடையிலேயே எழுதிய முன்னோடியாக நொபிலியார் இருந்ததாலேயே, அவர் 'தமிழ்உரைநடையின் தந்தை' என்றழைக்கப்படுகிறார். அவர் காலத்தில் பழங்கால உரையாசிரியர்களின் உரைநடை கல்வெட்டுகள் மற்றும் சாசனங்களில் இருந்த உரைநடை முதலியவையே புழக்கத்தில் இருந்தன. இவற்றைச் சிறிது தழுவியும் ஆனால் தற்கால மக்கள் புரிந்து புழங்குதற்கேற்ற வகையில் சற்று மாறுபட்டும் நொபிலியார் எழுதிய உரைநடை அமைந்திருந்தது. இவரது உரைநடையைப் பின்பற்றி, இவருக்குப் பின்வந்த இன்னொரு இயேசு சபைத்துறவியான வீரமாமுனிவரும் சில உரைநடை நூல்களை எழுதினார். தத்துவ போதகருக்கும் முன்பாகவே பதினாறாம் நூற்றாண்டில் தமிழில் உரைநடை நூல்களும் உண்டானதைப் பற்றி மயிலை சீனி, வேங்கடசாமி குறிப்பிடுகிறார். கி.பி 1577 இல் 'கிறித்தவ வேதோபதேசம்' என்ற நூல் வெளி வந்தது. இயற்றியவர் யார் என்று உறுதியாகத் தெரியவில்லை. பின்னர், ஆண்டிரிக்கசு அடிகளார் 1579இல் 'கீரிசித்தியானி வணக்கம்' என்ற நூலை வெளியிட்டுள்ளார். எனினும் முன்னோடியான பணிகள் கருதியும் நூல்களின் எண்ணிக்கை கருதியும் நொபிலியாரைத் 'தமிழ் உரைநடையின் தந்தை' என அழைப்பது மரபு.*

*நொபிலியாரின் உரைநடை அக்கால மரபைப் பின்பற்றி, வடமொழிச் சொற் பிரயோகங்கள் நிறைந்ததாகவும், நீண்ட வாக்கியங்கள் கொண்டதாகவும் அமைந்திருந்தது. அவரது ஞானோபதேசம் நூலிலிருந்து ஒரு பகுதி சான்றுக்குக் கீழே தரப்பட்டுள்ளது. இறைவன் உலகத்தைப் படைத்த சூழல் பற்றி விளக்கும் இப்பகுதி, கவித்துவம் நிறைந்ததாகவும், பிற்காலத்தவரான மறைமலை அடிகள் நடையைப் போன்றும் ஒரு நீண்ட வாக்கியமே ஒரு பத்தியாகவும் அமைந்துள்ளது காண்க.*

*ஆதிமனுஷனையும் அவனுக்குத் துணையாகக் கற்பித்தருளின ஸ்திரீயையும் ஸ்திரீயையும் பரிபூரண செல்வங்களைப் பொழிந்திருக்கிற வொருஸ்தலத்திலே நிறுத்திப் பூமியிலேயிருக்கிற மனுஷனுக்கு அப்படிப்பட்ட ஸ்தலத்தை விசேஷ ஸ்தலமாயிருக்கத் தக்கதாகக் கர்த்தாவானவர் கட்டளையிட்டருளினார்.*

*"ஆகையினாலே அந்த ஸ்தலத்திலே நிர்மலஜலமுள்ள பீசோன், சேயோன், திகிரீஸ், எவுபிறாத்தே என்ற நாலு தரங்கங்களின் நதிகள் பரவியோட, அவைகளுடைய வேகத்தினாலே புறத்திலே ஒதுக்கப்பட்ட வச்சிர வயிடூரியங்கள் விளங்க புஷ்பராக முதலான கெம்பு ரத்தினங்கள் அங்கங்கே பிரகாசிக்க பச்சை நீலம் மாணிக்கங்கள் அதினுடைய கரைகளை சிங்காரிக்க,*

கோமேதகம், பவளம், முத்து முதலானவைகள் அங்கங்கே சுவாலித்திருக்க, ஒன்றோடொன்று பின்னினாற்போல அலைகள் கரையிலே மோத அஞ்ச மிதுனங்கள் நீந்த, தாமரை நெய்தல் முதலான புஷ்பங்கள் சலத்தை யலங்கரிக்க நானா விதங்களான மச்சவினங்கள் நான்கெல்லையினு மோடித் திரிந்து விளையாட அப்படிப்பட்ட நதிகளுடைய மட்டோடு பரம்பியோடுகிற பிரவாகங்களினாலே அந்த ஸ்தலமானது மிகவும் மதுரமானதாய் வேடிக்கையோடே பொருந்தியிருக்கிற பற்பல விருக்ஷங்களாலே அலங்கரிக்கப்பட்டதுமாயிருந்து, கர்த்தரானவர் தாமே யுண்டாக்கின அப்படிப்பட்ட சிங்கார வனத்திலே கண்ணுக்குப் பிரியமானவைகளுமாய் பற்பல வர்ணங்களினாலே விளங்கப்பட்டவைகளுமாய் ஸ்பரிசத்துக்கு மிருதுவானவைகளுமாய் கனிந்த பழங்களுடைய பாரத்தினாலே கவிழ்ந்திருக்கிற கப்புக் கவர்களுள்ள விருக்ஷங்களுடைய சாலைகள் அங்கங்கே ஒழுங்காகக் காண்பித்திருக்க பலபல வர்ணங்களைக் கொண்டிருக்கிற வாசனையுள்ள புஷ்பங்கள் விகசித்திருக்க, அவைகள் உதிர்ந்து பட்டுப் பட்டாவளி போல தரையெல்லாம் சிங்காரிக்க மலர்ந்திருக்கிற புஷ்பங்களிலே ஒழுகுந் தேனையும் வீசுகிற வாசனையையும் மதுகரங்கள் நுகர, எண்ணப்படாத பக்ஷி சாதிகள் காதுக்கின்பமாய்க் கூவுகிற குரல்களினாலே மதுரமான நாதகீதம் பண்ணுகிறாப் போலே பாடிக்கொண்டிருக்க மான், கலை, முயல், மரை முதலான வேடிக்கையுள்ள மிருகங்கள் பயமில்லாமல் அங்கேயும் இங்கேயும் ஓடி விளையாட. சவாது கஸ்தூரி முதலான பரிமளங்களைப் பிறப்பிக்கிற மிருகங்களினாலே ஆகாசத்திலேயும் பூமியிலேயுஞ் சுகந்தங்கள் வீச, சிங்கம், புலி, கரடி முதலான துஷ்டமிருகங்கள் தமது துஷ்டகுண மென்னப்பட்ட யாவையும் மறந்து பயங்கர சொரூபியா யிராமல் சாந்த குணத்தைக் கொண்டிருந்து சாது மிருகங்களாய் அங்கேயு மிங்கேயுந் திரிய, பலபல புஷ்பங்களுடைய மதுரமான பரிமளங்களை மதுகரங்கள் பானம் பண்ணுகிறாப்போலே யிருக்க, குளிர்ச்சியான தென்றல் வீச, சூரியனானது தனது உக்கிரமான உஷ்ணத்தை மனுஷனிடத்திலே தைக்கப் பண்ணாமல் சகலத்துக்கும் மிதமான பிரகாசத்தைப் பரப்பப் பண்ண, தொங்குகிற மேற்கட்டிகள் போலே கவிழ்ந்திருக்கிற பரமண்டலமானது இரத்தின, மாணிக்கங்களைத் தோற்கடிப்பது போல நிரை நிரையே பதிக்கப்பட்ட நக்ஷத்திரங்களுடைய சொல்லப் | படாத அலங்காரங்களினாலே விளக்கப்பட்டிருக்க, இதெல்லாம் மனுஷனானவன் பார்த்துக் கர்த்தருடைய அளவறுக்கப்படாத பெலத்தையும் பரம சாமர்த்தியத்தையும் தப்பிலாக் கிரமத்தையும் கொண்டிருக்கிற விமரிசையையும், கரைகாணாத கருணையையுங் கண்டுபிடித்துச் சகலத்தையும் உண்டாக்கி நடத்திக் கொண்டு வருகிற கர்த்தனை அகோராத்திரம் இடைவிடாமற் கொண்டாடுகிறதுக்கும் அவர் பேரிலே குறையற்ற பக்தியை வைக்கிறதற்கும் அவருடைய சித்தத்தின்படியே குறையற்ற பிரகாரமாய் மனுஷன் நடக்க

*முழுமனதோடு துணிகிறதற்கும் முன் சொல்லப்பட்ட பொருட்களுடைய வேடிக்கையுள்ள தெரிசனமானது பரிபூரண காரணமாயிருந்ததென்று அங்கீகரிக்கக் கடவோம்."*

***ஞானோபதேச காண்டம், இரண்டாங் காண்டம்,***

***எட்டாம் பாடம்.***

### *IV. நொபிலியார் பணிகள் பற்றிய சர்ச்சைகளும் அவற்றின் பயன்களும்*



*தமிழகத்தில் பணியாற்றிய கிறித்தவ மறைப் பணியாளர்களிலேயே மிகுந்த விமர்சனத்துக்கும் விவாதங்களுக்கும் உள்ளானவர் இராபர்ட் -டி-நொபிலி என்பதில் ஐயமில்லை. ஏனெனில், அவர் இந்திய மயமாக்கல் முறையில் மறைப் பணியாற்றிய காரணத்தால், பல இந்து சமய நடைமுறைகளைப் பின்பற்றி, மறைமுகமாக தமிழகக் கிறித்தவத்தில் சாதீயக் கோட்பாடுகள் புகுவதற்குக் காரணமாகி விட்டார் என்பது பலருடைய குற்றச்சாட்டாகும். எனினும், இந்தியர்களுக்கு இந்தியராகவே இறைச்செய்தி அறிவிக்க வேண்டும் என்ற பைபிளின் புதிய ஏற்பாட்டுப் பெரும் பான்மை நூல்களின் ஆசிரியரான புனித பவுலடியாரின் கோட்பாட்டைப் பின்பற்றியே அவர் செயல்பட்டாரே அன்றி, வேறு தவறான நோக்கம் அவருக்கில்லை. இது பற்றி ஆய்வாளர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். "இவர் இவ்வாறெல்லாம் கோலத்தை மாற்றியதும் மாறுபாடான சில காரியங்களைச் செய்ததும் சுயநலத்தின் பொருட்டன்று. தாம் உண்மை மதம் என்று நம்பிய கிறித்துவ மதத்தில் இந்துக்களையும் சேர்த்து அவர்களையும் உய்விக்க வேண்டும் என்னும் நன்னோக்கம் பற்றியே. 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பது ஆன்றோரின் கொள்கையன்றோ?"*

*எவ்வாறாயினும் தத்துவ போதகர் எனப்பட்ட இராபர்ட் -டி- நொபிலி அடிகளாரின் அரும்பணிகளாலும் அரிய படைப்புகளாலும் உலகப் பெருமொழியாம் தமிழை உன்னதமான செம்மொழியாக ஆய்வுலகும் அறவுலகும் ஏற்றுப் போற்ற வழி பிறந்தது என்பதே மறுக்க முடியாத வரலாற்றுண்மையாகும்.*

## சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**

| | **நூல்கள்** | **விலை (Rs.)** |
|---|---|---|
| 1. | திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்) | 200 |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | உன்னோடு உரையாடுதல் | 100 |
| 2. | காதல் மொழி | 200 |
| 3. | பார்வையில் பூத்த நிலா | 100 |
| 4. | தேனடையும் வரலாறு | 100 |
| 5. | நுண்கலை மருத்துவன் | 200 |
| 6. | தொடரும் புழுதிக்கால்கள் | 100 |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். | 200 |
| 2. | எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம் | 200 |
| 3. | சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்) | 200 |
| 4. | வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட | 200 |
| 5. | மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர். | 200 |
| 6. | எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி | 200 |
| 7. | எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி | 200 |
| 8. | ஒளி விளக்கு எம்.ஜி.ஆர். | 200 |
| 9. | வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I | 200 |
| 10. | நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I] | 200 |
| 11. | பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II] | 200 |
| 12. | இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். | 200 |
| 13. | முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன் | 200 |
| 14. | இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர். | 200 |
| 15. | எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு | 200 |
| 16. | படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு | 200 |
| 17. | Unique Fandom of MGR | 200 |

| | | |
|---|---|---|
| *18.* | எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம் | *200* |
| *19.* | எம்ஜிஆர் படத்தில் சண்டைக் காட்சிகளின் சுவாரஸ்யங்கள் –I | *200* |
| *20.* | எங்க வீட்டுப்பிள்ளை | *200* |
| *21.* | எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும் | *200* |

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | தலைமை பொறுப்பேற்கலாம் | *120* |
| *2.* | இணையத் தமிழ் | *150* |
| *3.* | ஊடகச் சட்டங்கள் | *250* |
| *4.* | ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ் | *200* |
| *5.* | கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்) | *200* |
| *6.* | மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்) | *200* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு | *200* |
| *2.* | பெண் தெய்வ வழிபாடு | *200* |
| *3.* | தேவேந்திரன் | *200* |
| *4.* | மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை) | *200* |
| *5.* | இரு நிலத்தில் திருமுருகன் | *200* |
| *6.* | முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்) | *200* |
| *7.* | வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும் | *200* |
| *8.* | யானைக்கடவுள் | *200* |
| *9.* | பெண் பூப்பின் புனித வழிபாடு | *200* |

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்
**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | பாடுபொருளும் பாசப்பொருளும் | *250* |
| *2.* | "பூ மர நிழலி"ன் களமும் காலமும் | *200* |
| *3.* | "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு | *100* |
| *4.* | கவிஞர் முத்தமிழ் விரும்பியின் **கவிதையில் காதல்** | *100* |
| *5.* | கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள் | *200* |

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு
**முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | எட்டுத்திக் கும் செல்வீர் | *200* |
| *2.* | அவன் கடவுளுக்கு நிகரானவன் | *200* |
| *3.* | செக்கச் சிவந்த ரோஜா | *200* |
| *4.* | கலீல் ஜிப்ரா னின் "மணலும் நுரையும்" | *200* |
| *5.* | கலீல் ஜிப்ரானின் "பாடல்கள் 14" | *200* |

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

| | | |
|---|---|---|
| *1.* | Kurunthokai | *200* |
| *2.* | Agananooru | *200* |

| | | |
|---|---|---|
| *3.* | Purananooru | *200* |
| *4.* | Naaladiyaar | *200* |
| *5.* | Aasaarakkovai | *200* |
| *6.* | Thiru Kutraala Kuravanji | *200* |

**தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை**

| | | |
|---|---|---|
| *1.* | குறுந்தொகைக் கவிதைகள் | *200* |

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்)* | *200* |
| *2.* | *கவிதை மொழிபெயர்ப்பு* | *200* |
| *3.* | *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)* | *200* |
| *4.* | *மொழிபெயர்ப்பில் பெயரும் பொருளும்* | *200* |

**தமிழ் இலக்கண நூல்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழில் வேற்றுமை உருபுகள்* | *200* |

**சிறு கதை, கவிதை**

| | | |
|---|---|---|
| *1.* | *அமராவதியின் காதல் - சத்யப்பிரபா* | *200* |
| *2.* | *ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா* | *200* |

**மாத இதழ்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | தமிழணங்கு மாத இதழ் | *200* |
| *2.* | Love Thamizh | *500* |

**பேராசிரியர் முனைவர் தே. ஞானசேகரனின் நூல்கள்**
**ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

**Moonstone Publication, Madurai**

| | | |
|---|---|---|
| *1.* | Emerging Mallarism | *200* |
| *2.* | Festival of lord Indra | *200* |
| *3.* | Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) | *200* |
| *4.* | Re reading of Pallu literature | *200* |
| *5.* | Mallariyan Literature | *200* |
| *6.* | Frontyard without My Dad (Poem) | *200* |

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

| | | |
|---|---|---|
| *1.* | Therapist of the Finest Art | *200* |
| *2.* | Following Dusty Feet | *200* |

**Other Books**

| | | |
|---|---|---|
| *1.* | Concepts of Constitution - Dr.S. Kalai Arasu | *300* |
| *2.* | Aranyani By Vijeni (English Novel Part I & Part II) | *200* |




Hutha
Health Care Products

நலம்..தரம்..சுவை..! இதுவே எங்கள் தாரகமந்திரம்.

மசாலா வகைகள்

*மஞ்சள் தூள்
*தனி மிளகாய் தூள்
* பிரியாணி மசாலா
* 4 in 1 புளிக்குழம்பு மசாலா
* சாம்பார் மசாலா
*மட்டன் & சிக்கன் பெப்பர் தொக்கு மசாலா
* மருந்துக் குழம்பு மசாலா
* முடக்கற்றான் ரசப் பொடி
*மட்டன் & சிக்கன் குழம்பு மசாலா

ஹெல்த் மிக்ஸ்

* ஹெல்த் மிக்ஸ் பவுடர்
* கர்ப்பிணிகளுக்கான ஹெல்த் மிக்ஸ் பவுடர்
* டயாகேர் ஹெல்த் மிக்ஸ் பவுடர்
* பீட்ரூட் ஊட்டச்சத்து மால்ட்

பொடி வகைகள்

* பிரண்டை இட்லிப்பொடி
*பருப்பு சாதப்பொடி
*கொள்ளுப்பொடி

சைவ தொக்கு வகைகள்

* புளியோதரை தொக்கு
* கோங்குராத் தொக்கு
* தக்காளித் தொக்கு
* மல்லித் தொக்கு
* பூண்டு தொக்கு
* முருங்கைக் கீரை சூப்
* வத்தக்குழம்பு தொக்கு
*லெமன் சாதத்தொக்கு
*பிரண்டைத்தொக்கு

பிரசவ லேகியம் (On Order)

கோதுமை இடியாப்பம் மாவு

அசைவ தொக்கு வகைகள்

*வஞ்சிரக் கருவாட்டுத் தொக்கு
*மாசிக் கருவாட்டுத் தொக்கு
*இறால் தொக்கு



Mfg & Marketed by:
HUTHA HEALTH CARE PRODUCTS
Chromepet, Chennai - 600044
PH: 9025303765








சந்திரோதயம் பதிப்பகம்

தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்:
இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), சந்திரோதயம் அறக்கட்டளை,
3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226